# செந்தமிழ்த் தேனீ
# சோமலெ

பதிப்பாசிரியர்
பேராசிரியர் **இரா. மோகன்**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

**மணிவாசகர் பதிப்பகம்**
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை-600108.

முதற் பதிப்பு : டிசம்பர், 2002
திருவள்ளுவர் ஆண்டு : 2033

**விலை : ரூ. 40.00**
மணிவாசகர் வெளியீட்டு எண் : 962

பதிப்பாசிரியர்
முனைவர் ச. மெய்யப்பன்

ச. மெய்யப்பன், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்.

தமிழகப் புலவர்குழுவின் துணைத் தலைவர்.

பல்கலைக்கழகங்கள் பலவற்றில் அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

'வள்ளுவம்' இதழின் சிறப்பாசிரியர்.

குன்றக்குடி அடிகளார் **தமிழவேள்** என்றும், தருமபுரம் ஆதீனத் தலைவர் **'செந்தமிழ்க் காவலர்'** என்றும் விருதுகள் வழங்கிச் சிறப்பித்துள்ளனர்.

**பதிப்புச்செம்மல்** என அறிஞர்கள் இவரைப் பாராட்டுவர்.

**மணிவாசகர் நூலகம்**

12-B, மேல சன்னதி, சிதம்பரம் - 608 001.
31, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 600 108.
5, சிங்காரவேலுதெரு, தி. நகர், சென்னை - 600 017.
110, வடக்கு ஆவணி மூல வீதி, மதுரை - 625 001.
15, ராஜ வீதி, கோயமுத்தூர் - 641 001.
28, நந்தி கோயில் தெரு, திருச்சி - 620 002.

தொலைபேசி :

| | | | |
|---|---|---|---|
| **சிதம்பரம்** | **: 230069** | **சென்னை** | **: 25361039** |
| **தி. நகர்** | **: 24357832** | **மதுரை** | **: 2622853** |
| **கோயமுத்தூர்** | **: 2397155** | **திருச்சி** | **: 2706450** |

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர், சென்னை - 600 021.
தொலைபேசி : 25954528



கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை,
திரு.சொ. முருகப்பா ஆகியோருடன் சோமலெ






# மணம் தரும் பூக்கூடை; பயன் தரும் பழக்கூடை

## பதிப்புச்செம்மல் ச. மெய்யப்பன்

## நிறுவனர் : மெய்யப்பன் தமிழாய்வகம்

உலகம் சுற்றிய தமிழர் ஏ.கே. செட்டியார் வழியில் சோமலெ பயண இலக்கியத்திற்கு வளம் சேர்த்தவர். உலக நாடுகளில் ஏற்படும் மாற்றங்களைப் படம்பிடித்துக் காட்டியவர். உலக நிகழ்வுகளைக் 'கல்வெட்டுகள்' போல் பதிவு செய்தவர். மாவட்ட வரிசை நூல்களால் தமிழகத்தின் சமகால, நிகழ்கால நிகழ்வுகளைச் செப்பேடாக்கிய செம்மல், ஒப்பில்லாப் பணிகளால் உயர்ந்த உத்தமர்,

மூன்று துறைகளில் முத்திரை பதித்த வித்தகர்:

**பயண இலக்கியம்**
**நாட்டுப்புற இயல்**
**வரலாற்று வரிசை**

12 மலர்கள் இவருடைய கை வண்ணத்தில் வெளியாகி யுள்ளன. இவற்றுள் திருவண்ணாமலை, சிதம்பரம், இராமேசுவரம் கோயில் மலர்கள் புகழ்பெற்றவை.

சோமலெ எளிமையும் தன்னடக்கமும் உள்ளவர். நண்பர்களுடன் சரளமாகவும் உரிமையுடனும் பேசுவார். எளிய தோற்றம், சாந்தம் தவழும் முகம், இனிமையான பேச்சு. எவ்வளவு நேரமானாலும் இவருடன் பேசிக்கொண்டிருக்கலாம். குறித்த நேரத்தில் எதையும் செய்யும் பழக்கம் உள்ளவர். கடிதங்களுக்கு உடனுக்குடன் மறுமொழி எழுதும் பண்பாளர்.

பல பெருமக்களை அறிமுகப்படுத்திய ஒரு பெருமகன். சோமலெ ஒரு சுதந்திரப் பறவை. அவர் எவருக்கும் கட்டுப்பட்டவர் அல்லர். சுயமாகச் சிந்தித்து, சுதந்திரமாக எழுதி வந்தார். சுதந்திரக் காற்றையே சுவாசித்து வந்ததால் அவருடைய எழுத்தும் பேச்சும் சுதந்திர கீதங்களாக இசைத்தன.

மக்கள் சக்தி இயக்க நிறுவனர் சிந்தனையாளர் எம்.எஸ். உதயமூர்த்தி, சோமலெ அவர்களின் **'அமெரிக்காவைப் பார்'** என்ற நூலைப் படித்ததால்தான் அமரிக்கா சென்றேன் என்று மனம் திறந்து எழுதியுள்ளார்.

இன்று உதயமூர்த்தி பல்லாயிரக்கணக்கான இளைஞர்களுக்கு ஆதர்சமாக விளங்குகிறார். அவருக்கு ஊக்கமும், உற்சாகமும், ஏற்படுத்திய **கிரியா ஊக்கியாக** சோமலெ உள்ளார்.

வாழ்க்கை வரிசை நூல்கள் –3
மாவட்ட வரிசை நூல்கள் – 9
குடமுழுக்கு மலர்கள் – 12

எனப் பல துறைகளிலும் முத்திரை பதித்து நூல் வெளியீட்டில் சாதனை படைத்தவர். இவர் அரும்பாடுபட்டு எழுதிய திருநூல், பெருநூல் **'செட்டிநாடும் செந்தமிழும்'** என்னும் 600 பக்க நூல். ஓர் இனத்தின், ஒரு சமூகத்தின் மொழிப் பங்களிப்புக்கு மூல ஆதாரமாக விளங்குகிறது.

சோமலெ அவர்களின் அனைத்து நூல்களையும் கற்றுத் தேர்ந்து தெளிந்து, இந்த மணிமொழிகளை, மாணிக்கப் பொன்மொழிகளைத் தொகுத்துள்ளார் பேராசிரியர் இரா. மோகன். நூல்களை வாங்குவதும் படிப்பதும், குறிப்பெடுப்பதும், அவற்றைத்

தக்க சமயத்தில், உரிய இடத்தில் பயன்படுத்துவதும் பேராசிரியர் மோகனுக்குக் கை வந்த கலை. இதில் மோகனுக்கு நிகர் மோகனே!

இந்த நூற்றாண்டை, சங்க காலத்தைப்போல, **தொகை நூற்காலம்** என்று சொல்லலாம். இந்தத் தலைமுறையின் தலைசிறந்த தொகுப்பாளராக மோகன் திகழ்கிறார். இவரின் கல்விப் பயிற்சி, பன்னூற் படிப்பு, அறிவாற்றல், ஆளுமை, இவர் தம் தொகுப்பு நூல்களில் பளிச்சிடக் காண்கிறோம்.

இத் தொகுப்பு அறிவுக்கு விருந்து. சிந்தனையைத் தூண்டும் தொகுப்பு. சிந்தை மகிழச் செய்யும் மலர். செந்தமிழ் மணம் கமழும் பூக்கள் மிகுதியாக இருப்பதால் இதனை ஒரு **பூக்கூடை** எனலாம். பயன்தரும் கருத்துக்கள் பல உள்ளதால் **பழக்கூடை** என்றும் பகரலாம்.

*தக்கார் தகவிலர் என்பது அவரவர்*
*எச்சத்தால் காணப் படும்* (114)

என்னும் குறளுக்குப் பிள்ளைகள் என்றும், அவர் விட்டுச் சென்ற புகழ் என்றும் உரை கூறுவர். எவ்வாறாயினும் சோமலெயின் சுந்தரப் புதல்வர் சோமசுந்தரம் தந்தையின் புகழ் காக்கும் தனயனே. தந்தையின் ஆற்றலை, ஆளுமையை, அருமை பெருமைகளை உணர்ந்து போற்றும் உத்தம புத்திரன்.

*மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை*
*என்னோற்றான் கொல்எனுஞ் சொல்* (70)

அறிவு ஒழுக்கங்களில் சிறந்த சோமசுந்தரத்தைப் பெறுதற்கு இவர் தந்தை என்ன தவம் செய்தாரோ என்று நாமெல்லாம் நினைத்து வாழும்படி சோமசுந்தரம் விளங்குகிறார்.

*தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து*
*முந்தி இருப்பச் செயல்* (67)

என்னும் குறளுக்கு நூற்றுக்கு நூறு வாழ்கால சாட்சியமாக விளங்குபவர் வேளாண் விஞ்ஞானி சோமலெ சோமசுந்தரம். நல்ல தந்தைக்கு வாய்த்த நன்மகனுக்கு நம் வாழ்த்துக்களும் பாராட்டுக்களும்.

## சில சொல்

'சோமலெ' என்ற புனைபெயர் கொண்ட சோம.லெ. இலக்குமணச் செட்டியார் (1921-1986) ஓர் எளிய குடும்பத்தில் பிறந்தவர்; தமது கடுமையான உழைப்பின் மூலம் வாழ்வில் படிப்படியாக முன்னேறியவர்; 65 ஆண்டுகள் மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்தவர். 'தோன்றின் புகழொடு தோன்றுக' என்னும் வான்புகழ் வள்ளுவர் வாய்மொழிக்கு ஏற்ப, தாம் அடியெடுத்து வைத்த துறைகளில் எல்லாம் அழுத்தமான முத்திரை பதித்தவர் சோமலெ. அவர் 'தென்னாட்டு மார்க்கோ போலோ' என்றும், 'நடமாடும் தகவல் களஞ்சியம்' என்றும், 'நெற்குப்பை பெற்றுத் தந்த நிறைகுடம்' என்றும், 'சீர்மிகுந்த தமிழறிஞர்' என்றும், 'புனிதமிகு விழா மலர்கள் பதிப்பிக்கின்ற பூந்தோட்டம்' என்றும் தமிழ்கூறு நல்லுலகால் நெஞ்சாரப் போற்றப்பெற்றவர். 'தேனீக்கு வகுப்பெடுக்கும் சுறுசுறுப்பு' என்றும், 'சுறுசுறுப்பு என்னும் சொல் பிறக்கும் முன் பிறந்தவர்' என்றும் அவரது அயரா உழைப்பைப் போற்றிப் புகழ்வர் கவிஞர் பெருமக்கள். அவரது படைப்பாற்றலின் பன்முக ஆளுமையை முனைவர் நிர்மலா மோகன் சாகித்திய அக்காதெமியின் 'இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை'யில் சோமலெ குறித்து எழுதிய நூலில் அழகுறப் புலப்படுத்தியுள்ளார்.

'A Shaw Companion', 'Bertrand Russells's Best' என்றாற் போல் ஒரு படைப்பாளியின் பன்முகத் திறன்களையும் பொதுமக்களுக்கு எளிய, சுவையான முறையில் அறிமுகம் செய்து வைக்கும் நூல்கள்

ஆங்கில இலக்கிய உலகில் நிறைய உண்டு. அந்நூல்களின் வரிசையில் இடம்பெறுவதுபோல், எழுத்தாளர் சோமலெயின் பல்வேறு பரிமாணங்களையும் பறைசாற்றும் வகையில் அவரது அனைத்து நூல்களில் இருந்தும் நனிசிறந்த பகுதிகளைத் தேர்ந்து, ஒரு மாலையாகத் தொகுத்துத் தரவேண்டும் என்ற விருப்பம் என்னுள் எழுந்தது. சோமலெயின் அருமைப் புதல்வர் திரு. சோமலெ சோமசுந்தரமும், 'பதிப்புச் செம்மல்' ச. மெய்யப்பன் அவர்களும் என் விருப்பம் செயல் வடிவம் பெறப் பல்லாற்றானும் ஆக்கமும் ஊக்கமும் தந்தனர். என் இலக்கிய ஆசான் 'தமிழ்ச் செம்மல்' பேராசிரியர் தமிழண்ணல் அவர்களும், என் வாழ்க்கைத் துணைவியார் முனைவர் நிர்மலாவும் இந்நூலாக்க முயற்சியின் போது அனைத்து நிலைகளிலும் எனக்கு உற்றுழி உதவினர். எழுத்தாளர் சோமலெயின் நூல்களுக்கு ஓர் ஆற்றுப்படையாக விளங்கும் விதத்தில் 'செந்தமிழ்த் தேனீ சோமலெ' என்னும் இந்நூல் உருவாயிற்று.

சோமலெயின் ஆளுமையிலும் எழுத்திலும் ஆழ்ந்த அக்கறையும் ஆர்வமும் கொண்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான இலக்கிய ஆர்வலர்கள் இம்முயற்சியை வரவேற்றுப் போற்றுவர் என உளமார நம்புகிறேன்.

மதுரை – 625019 இரா. மோகன்

25.12.2002

# உள்ளுறை



சோமலெ சோமசுந்தரம், **A.V.M.** சரவணன், சோமலெ





கொச்சி முத்தமிழ்ச் சங்க விழாவில் சிறப்பு விருந்தினராக
சோமலெ, லேனா தமிழ்வாணன்

1

## கவி மலர்கள்



## தோரண வாயில்

**செ**ட்டி நாடும் செந்தமிழும் செய்த தவத்தால் வந்தமகன்
பெட்டி யடியில் இருக்காமல் பேசும் மலர்கள் மலர்வித்தோன்.
ஒட்டி யிருந்து பேரறிவால் உலகம் சுற்றி நூல் ஆக்கித்
தொட்டால் இனிக்கும் தமிழ்தந்த சோம லெயின் புகழ்வாழ்க!

## 1. சொல்லால் அமுதை வென்றிடுவோன்

எல்லா நாடும் தன் நாடாய்
எங்கும் சுற்றி ஆராய்ந்து
நல்லார் பலரின் கருத்தை யெல்லாம்
நாளும் தேடித் தமிழ் மக்கள்
பல்லார் அறியச் செந்தமிழில்
பண்பாய் உரைக்கும் என் நண்பன்
சொல்லால் அமுதை வென்றிடுவோன்
சோம லக்குமணன் வாழ்க!

*– கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை*

## 2. தென்னாட்டு மார்க்கோ போலோ

சீர்மிகுந்த தமிழறிஞர்; உலகம் சுற்றிச்
சிறப்படைந்த தென்னாட்டு 'மார்க்கோ போலோ!'
ஏர்சிறந்த பாரதத்தை, எழுது கோலால்
இமயமுதல் குமரிவரை அளந்த மேதை!
பார்புகழும் தமிழகத்தை ஊர் ஊராகப்
பகலிரவாய் நகலெடுத்து வந்த தூதர்!
நீர்பிறந்த பின்னாலே பேர்சி றந்த
'நெற்குப்பை' தனில்நீங்கள் தங்கச் சம்பா!

இனிமைமிகு செந்தமிழில், ஆங்கி லத்தில்,
எண்ணற்ற நூல்வழங்கும் சுரங்க மானீர்!
புனிதமிகு 'விழாமலர்கள்' பதிப்பிக் கின்ற
பூந்தோட்டம்; திருப்பணிக்கு அரங்க மானீர்!
தினச்செயல்கள் திட்டமிடும் நாட்கு றிப்பு;
தேனீக்கு வகுப்பெடுக்கும் சுறுசு றுப்பு!
தனிமனிதர்; அச்சமற்ற அச்ச கம்நீர்;
தகுதிக்கு அரசாங்கப் பரிசு பெற்றீர்!

உலகறிந்த எழுத்தாளர்; குறளைப் போல
உள்ளடக்கம்; விளம்பரத்தை விரும்பா நெஞ்சம்!
பல துறைகளில் பெரும்பதவி வகித்த பின்பும்
பார்வைக்கு எளியவராய்த் திகழும் தோற்றம்!
உலகத்தின் உயர்கல்விக் கழகம் தோறும்
உங்களது படைப்பு பல பாட மாகும்!
கலகத்தைக் கீழ்மைகளைக் கண்டால் சீறும்
இலக்குமணக் கோபமது ஊர்க்கு லாபம்!

மூத்தவர்நீர், முன்னவர்நீர்; பயணத்திற்கு
முன்னோடி யானவர் நீர்! பயணத் தந்தை!
ஏத்திதமிழ் நாற்றிசையும் இசைத்த வர்நீர்!
என்றென்றும் தமிழ்போல் வாழ்க நீவீர்!

– *கவிஞர் தாராபாரதி*

## 3. தமிழுக்குள் நிலைத்திருக்கும் தவச்செல்வர்

நகரத்தார் திருப்பணிகள் விரித்துரைக்க
நாட்டினிலே முதன்முதலாய் முயன்ற அண்ணன்!
உகப்புடனே செட்டிநாடும் தமிழும் என்ற
ஒப்பரிய நூலெழுதிப் புகழைச் சேர்த்தார்
இகத்துடனே பரமருளும் இறைவர்க்கெல்லாம்
இராமேசுவரம் காசிஅண்ணா மலைசிதம்பரமாம்
மிகப்பெரிய கோயில் கட்கு மலர்தொடுத்து
மேன்மைமிகப் படைத்திட்டார் உலகம் உய்ய!
திரு மிகுந்த நெற்குப்பை சிறக்க வந்தார்!
திகழ்ந்தொளிரும் குடும்பத்தில் புகழைச் சேர்த்தார்!
அருமைமிகும் பண்பாளர் திறமை மிக்க
ஆற்றலினால் உலகமெலாம் பயணம் செய்தார்!
பெருமைதர எழுத்துலகில் உயர்ந்தார்! கண்டோர்
வியக்குவணம் சுறுசுறுப்பாய்ச் செயல்மேற் கொண்டார்
அருமைமிகும் அண்ணனவர் சோமலெ என்று
அகிலமெலாம் அழைக்கின்ற புகழின் செல்வர்!
உலகத்தை வலம்வந்து பயண நூல்கள்
ஒவ்வொன்றாய் எழுதியந்தத் துறைவளர்த்தார்!
நிலவும்நம் நாடறிய மாவட்ட நூல்கள்
நிகரற்ற விவரமுடன் தொகுத்தளித்தார்!
அலகில் தமிழ் வளரும்விதம் அறியும் வண்ணம்
ஆங்கிலத்தும் தமிழினிலும் நூல்கள் யாத்தார்!
நிலவுலகில் நாட்டுப்புறக் கலைகள், பாடல்
நீர்மையுடன் ஆதியிலே தொகுத்த சான்றோர்!
குணமிருக்கும் இடத்தினில்தான் கோபம் தோன்றும்
குலம்தழைக்கும் செல்வருக்குக் குற்றம் கண்டால்

கணப்பொழுதில் சீற்றம்வரும் உடனே மாறும்
கருத்தினிலே பட்டதனை வெளிப்படுத்தும்
தணப்பரிய இயல்புடையார் அதனால் எங்கும்
தாங்கரிய தடைகள் வரும் ஆனாலும் என்?
குணக்குன்றின் நல்லுளத்தை அறிந்து கொண்டோர்
கோபமதன் அடித்தளத்தில் பாசம் காண்பார்!
தேனீயும் பின்னடையும் சுறுசுறுப்பு!
சிற்றெறும்பும் அறியாத விறுவிறுப்பு!
வானீயும் மாமழையும் பிற்பட்டேங்க
வளர்தமிழுக் கவரளித்த புலத்தொகுப்பு!
கானீயும் கனிவகைபோல் கருத்துச் செல்வம்
கணக்கெடுத்த துபோலே தொகுத்தளிப்பார்!
தானீயும் தமிழுக்குள் நிலைத்திருக்கும்
தவச்செல்வர் 'சோமலெ' நினைவு கொள்வோம்!

– *பேராசிரியர் தமிழண்ணல்*

## 4. சுறுசுறுப்பு என்னும் சொல் பிறக்கும் முன் பிறந்தவர்

சுறுசுறுப்பு என்னும்
சொல்பிறக்கும் முன் பிறந்தவர்
சோமலெ.
சும்மா இருப்பதே
சுகம் சிலருக்கு – அவர்கள்
படுத்து எழுந்த இடத்தில்
பூமி கூடக்
குறட்டை விட்டுக் கொண்டிருக்கும்.

சோமலெ
உட்கார்ந்து எழுந்த
நாற்காலிகூட
ஒருநாள் எல்லாம்
ஆடிக்கொண்டிருக்கும்.

அவர்
அறிவின் கூர்மையை
ஆயிரம் வாள்களுக்குப்
பங்கிட்டுக் கொடுக்கலாம்.

அழுதுகொண்டே
பேசும்
மெழுகு திரியில்லை
அவர்
அதட்டும் மின்னல் .

பொங்குமா கடல்
அவர் – ஒரு
புல்லாங்குழலின்
பொத்தல்களில் புகுந்துவர
முடியாது.

ஊசி மனிதர்
குத்தினாலும் – 'நூல்' கொண்டு
தைத்து விடுவார்
உள்ளங்களை.

வெட்டெனப் பேசலன்றி
வெட்டியாய்ப்
பேசாதவர்.

அவர் வார்த்தைகளால்
ஆயிரம்
விளக்கேற்றி வைக்கலாம்.

தராசு முள்ளுக்கு
விடுமுறை
தரவேண்டி வந்தால்
அந்த இடத்தில்
நிறுத்தி வைக்கலாம் சோம.லெ.வை.

வெயிலடிக்கும் அவர்
விழிகள், ஆனால்
வெப்பம் இருக்காது.

காயிருக்கும் அவர்
சொல்லில் – ஆனால்
கசப்பிருக்காது.

நதியைப்போல்
ஓடி ஓடி
நன்மை செய்ய
நாம் கண்ட மனிதர்
சோமலெ.

அடக்குமுறை அவரிடம்
இருக்கும், அது
சுளையை
அடக்கி வைக்கும் பழத்தின்
தோல்போல.

கடமை
சிலருக்குக் கால் செருப்பு
கழற்றிவிடவே
துடிப்பார்கள்.

புண்ணுக் குள்ளும்
சோம.லெ.விடம் கடமைப்
பூப்பூக்கும்.

வாழ்க்கையிலேயே
பலருக்குச்
சுரணை இருப்பதில்லை.

அவரோ
மரணத்திற்கும்
சுரணை யூட்டியவர்.

அடையாறு அஞ்சல் பெட்டியில்
முத்திரை குத்தித் தனது
கடைசி மூச்சைப் போட்டார்.

காலதேவனுக்குப்
பயண இலக்கியம் ஒன்று
படிக்கக் கிடைத்தது.

பயணம்
பழுக்கப் போடுகிறது
மனிதனை.

வானம்
பறவைகளை வார்ப்பதுபோல்.

மனிதனைச்
சுற்றிவரச் சொல்லித்தான்
தினமும்
சுற்றிவருகிறது பூமி.

மெக்காலே
இருபது நூல் படித்தான்
ஒரு வாக்கியம் எழுத;
இருபது கல் நடந்தான்
ஒரு வருணனை வரைய.

சோமலெ
ஒருவாக்கியம் எழுத
இருபது மனிதரைப்
படித்தார்.
ஒரு வருணனை செய்ய
இருபது
அனுபவம் முடித்தார்.

சிலருக்குத்
தேம்சு நதி தெரியும்
திருச்சித் தெப்பக்குளம்
தெரியாது.

ஆகாயம் பார்க்கக்கூட
அயலூர் போவார்கள்.
சொமலெவுக்கு
உலக நதிகள் தெரியும்முன்
உடம்பு இளைத்த
உள்ளூர் ஓடைகள் தெரியும்.

உரைநடைக் கம்பன்
சோமலெ
உலகநாடுகள் பற்றி எழுதினார்
ஊர்களே
தேரேறிப் புறப்பட்டன
உலகம் பார்க்க.

ஊர் பார்க்கமட்டும்
தெரிந்தவரா அவர்?
ஊர்களின்
வேர்பார்க்கவும் வல்லவர்.

அவருக்குப்
பயணம் இல்லா
நாள் எல்லாம்
பயன் இல்லா நாள்.

செ. உ.

தூரமும் நேரமும்
அவர் தொட்டதும்
சூல் உற்றன.

மாவடு தின்னாமல்
மசக்கை இல்லாமல்
புத்தகக் குழந்தைகள்
பெற்றுக் கொடுத்தவர்.

அவர்
பேனாவுக்கு
எப்போதுமே
இடுப்பு வலிதான்.

அவருடைய
பயணநூல்களில்
பக்கங்கள் இல்லை;
ஊர்கள் இருந்தன.

வாக்கியங்கள் இல்லை;
வாழ்க்கைகள் இருந்தன.
வார்த்தைகள் இல்லை;
மக்கள் இருந்தனர்.
எழுத்துக்கள் இல்லை;
இதயங்கள் இருந்தன.
அர்த்தங்கள் இல்லை;
அனுபவங்கள் இருந்தன.
படித்து முடித்ததும்
நூல்கள் இல்லை;
பயணங்கள் இருந்தன.

முந்தையநாளில்
பிறந்திருந்தால் சோமலெ
அந்தக் கொலம்பசுக்கும்
பாடம்
சொல்லிக் கொடுத்திருப்பார்.
வாஸ்கோட காமாவுக்கு

வரைபடம்
போட்டுக் கொடுத்திருப்பார்.
மார்க்கோ போலோவின்
மகளை
ஒருவேளை மணந்திருப்பார்...

ஏனெனில்
தன் தாயின் கருவறையிலேயே
அவர்
தேசப்படங்களில்
திசைகளைத் தேடிக் கொண்டிருந்தவர்.

தொட்டிலுக்குள்ளிருந்தே
தூரகிழக்கு நாடுகளை
எட்டிப்
பார்த்துக் கொண்டிருந்தவர்.

வாக்கியம் முடிந்தும்
அர்த்தங்கள்
தொடர்வதுபோல் சோமலெ
வாழ்வுமுடிந்தும்
வரலாறு தொடர்கிறது.

பயணங்கள்
முடிவதில்லை! ஆம்!
சோமலெ பயணம்
சோமசுந்தரத்தில்
தொடர்கிறது.

தொடரும் பயணங்களில்
சோமலெ
வாழ்வும் தொடரும்!
தொடரட்டும் என்றும்!

*– கவிஞர் ஈரோடு தமிழன்பன்*

## 5. நெற்குப்பை பெற்றுத் தந்த நிறைகுடம்

நெற்குப்பை பெற்றுத் தந்த நிறைகுடம் சோம லெயின்
பொற்பினை முழுது மெந்தப் புலவனு மளக்க மாட்டான்
கற்பவை கற்றுத் தேர்ந்து கனிதமிழ் வளரத் தந்த
சிற்பியாம் சோம லெயின் திருப்புகழ் என்றும் நிற்கும்.

பொய்யிலா வடியர் கூடிப் பொற்புடன் குடநீ ராட்டுச்
செய்யவே நினைப்ப ராகில் சிவபிரான் அவர்முன் தோன்றி
ஐய! நம் சோம லெயின் அருமலர் மலரு மானால்
செய்யலாம் குடநீ ராட்டுச் சிறப்புடன் என்று சொல்வான்.

பண்டித மணியின் வாழ்வைப் படமெனப் பிடித்துத் தந்தார்
கண்டவர் வியக்கும் நெஞ்சக் கடுமையும் கனிவும் கொண்டார்.
தொண்டனாய் உலக மெல்லாம் சுற்றிய தமிழர் ஆனார்.
வண்டமிழ் வளர்க்க விண்ணில் வானவர் அழைக்கப் போனார்.

*– கவிஞர் சொ.சொ.மீ. சுந்தரம்*

## 6. தஞ்சைக் கோபுரக் கலசமானார்

ஒருசிலர் எல்லாம் செய்வர்;
　　செய்வதை ஒழுங்காய்ச் செய்யார்
ஒருசிலர் ஒன்றே செய்வர்;
　　செய்யினும் ஒழுங்காய்ச் செய்வர்.
அரும்பெரும் செயல்கள் செய்யும்
　　ஆற்றலோர் சிலர்க்கே உண்டு,
திருவாளர் 'சோமலெ' செய்துவரும்
　　சேவையோ அரிய சேவை!
பழங்காலச் சுவடி தேடும்
　　பணியிலே ஈடு பட்டு
விழும் காலம் வரும் வரைக்கும்
　　வேண்டிய தொண்டு செய்தார்
செழுங்காந்தள் மலரைப் போன்று
　　சிவந்தவர் செய்த தொண்டோ
ஒழுங்கான தொண்டு – தமிழ்
　　உலகமே போற்றும் தொண்டு!
ஆயிரம் பிறைகள் கண்டார்
　　ஆணிப்பொன் 'சோமலே' – பெற்ற
தாயினும் சிறந்த தான
　　தமிழுக்கே தம்மை ஈந்தார்!
தூய நற் சுவடி தந்த
　　தூயவர் – பாடல் பெற்ற
கோயில் போலானார் தஞ்சைக்
　　கோபுரக் கலசமானார்!

*– கவிஞர் அ.சொ. சிவப்பிரகாசம்*

## 2

# நினைவுச் சித்திரங்கள்



## 7. பயண இலக்கியத்திற்கு வளம் கூட்டியவர்

### சுப. முத்தையா

தமிழில் பயண இலக்கியங்களுக்கு வளம்கூட்டியவர் சோமலெ. இவர் பிரபல வணிகக் குடும்பத்தில் பிறந்த போதிலும் இவருடைய சிந்தையைக் கவர்ந்தது வாணிகம் அல்ல, இலக்கிய ஆர்வமே. இதன் விளைவாக தமிழ்க்கலை, பண்பாடு, சுற்றுலா, செய்தி இயல் ஆகிய பல்வேறு துறைகளில் வாழ்க்கை முழுவதும் ஈடுபட்டு முத்திரை பதிந்த பல்வேறு நூல்களை இவர் இயற்றியுள்ளார். இத்துறை களில் அவருக்கிருந்த விரிவான அறிவுக்கும், இவற்றை நுட்பமாக ஆராய்ந்து செம்மையாக வெளியிடும் திறனுக்கும் இவரது நூல்களே நேரடிச் சான்றாகும். விவரங்களை நுட்பமாகச் சேகரிப்பது, அவற்றை முறையாகத் தொகுப்பது, படிப்பவரின் உள்ளம் ஏற்றுக்கொள்ளக்கூடிய விதத்தில் மெருகேற்றுவது இம்மூன்றிலும் அனுபவக் கனிவு பெற்றவர் சோமலெ. சுற்றுலாப் பயண நூல்களை இவர் எழுதத் துவங்கிய நேரத்தில்

தமிழ் எழுத்தாளர்கள் எவரும் இத்துறையில் சிந்தனையைச் செலுத்தியதில்லை. ஆனால் எவரும் நுழையாத துறைகளில் புகுந்து சீரிய உழைப்பாலும், கூர்த்த மதியாலும் பயனுள்ள பல நூல்களைத் தமிழகத்துக்கு அளித்து சாதனை படைத்தார் சோமலெ.

**புதிய வடிவம்**

"சோமலெயின் பயண நூல்களைப் படித்த பின்னர்தான் எனக்கு அமெரிக்காவுக்குப் போக வேண்டும் என்ற ஆர்வமே ஏற்பட்டது" என்று டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி கூறியிருப்பதிலிருந்து இவர் இயற்றிய பயனுள்ள நூல்கள் இளைஞர்களின் மனதில் எத்தகைய விளைவுகளை ஏற்படுத்தி உள்ளன என்பதைப் புரிந்துகொள்ள முடியும். அவர் இன்றைய பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் நெற்குப்பை என்ற ஊரில் 1921-ஆம் ஆண்டு பிப்ரவரி 11-ஆம் நாள் பிறந்தார். சென்னை மாநிலக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்று, பிறகு பத்திரிகைத் துறையில் பட்டயமும் பெற்றார்.

1955-லிருந்து 71 வரை அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சென்னைப் பல்கலைக்கழகம், மதுரை காமராஜ் பல்கலைக்கழகம் போன்றவற்றில் பல்வேறு பொறுப்புகளை ஏற்றுப் பணியாற்றினார். சென்னையில் உள்ள உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கில் பிரிவுத் தலைவராகவும் அவர் பணியாற்றியுள்ளார்.

பல துறைகளில் இவர் நூல்களை இயற்றி யுள்ளபோதிலும் இவருடைய பயண நூல்கள் பயண இலக்கியத்திற்கே புதிய வடிவத்தை உருவாக்கித் தந்தன. இவருடைய நூல்களுக்கு அரசு பரிசளித்துச் சிறப்பித் துள்ளது. தேசிய புத்தக நிறுவனம், சாகித்ய அகாதெமி, வரலாற்று ஆய்வு இந்தியக் கழகம் போன்றவை இவருடைய நூல்களை வெளியிட்டதோடு, பிற மொழிகளில் மொழி பெயர்த்தும் இவருக்குச் சிறப்பைச் சேர்த்துள்ளன. ரஷிய -

லெனின்கிராடு பல்கலைக்கழகத்தில் இவருடைய நூல்கள் மாணவர்க்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளன.

எழுத்தாளர், நூலாசிரியர், பதிப்பாளர் எனப் பல்துறை விற்பன்னராக விளங்கியபோதிலும் அவர் உயர்ந்து நின்றது திறனாய்வாளன் என்ற நிலையில்தான். திறனாய்வாளன் என்ற முறையில், எவரைப் பற்றியும், எந்நூலைப் பற்றியும், எந்த நிகழ்ச்சி பற்றியும், நடுநிலை நின்று தம் கருத்துக்களைத் தெரிவித்து வந்தார். எக்காரணத்தைக் கொண்டும் நடுநிலைக் கொள்கையிலிருந்து இம்மியும் பிறழாத கொள்கை உறுதி மிக்கவர். சற்றே பிறழ்ந்திருந்தாலும், செல்வச் சீமானாக அவர் விளங்கியிருக்க முடியும். இக்கொள்கையைக் கண்டிப்புடன் கடைப்பிடித்து எழுதியதாலேயே தமது திரண்ட செல்வத்தையும் அவர் இழந்திருக்கிறார்.

**அயராத உழைப்பு**

சோமலெயிடம் சில அபூர்வப் பண்புகள் நிறைந்திருந்தன. சுறுசுறுப்பு, அயராத உழைப்பு, குற்றம் கண்டவிடத்து எதைப்பற்றியும் கவலைப்படாது எடுத்துக்காட்டும் துணிச்சல், எளிய வாழ்க்கை, மனத் திட்பத்தோடு கூடிய வினைத்திட்பம் ஆகியவை அவருடைய பண்புகளில் எடுப்பானவை. தமிழ் நூல்களை அழகாகவும் சிறப்பாகவும் எவ்வாறு வெளியிடுவது என்பதற்கு தாமே ஒரு முன்னுதாரணமாகத் திகழ்ந்தார்.

தேனீக்கள் மலர்கள் தோறும் சென்று தேனை சேகரிப்பது போல, பல்வேறு இடங்களுக்கும் நேரில் சென்று இவர் செய்திகளைத் திரட்டினார். அப்படி சேகரித்த செய்திகளை மீண்டும் மீண்டும் ஒப்பீடு செய்து நம்பத்தக்கவையாக இருந்தால் மட்டுமே அவற்றை நூலில் சேர்ப்பார்.

இவர் எழுதிய நூல்களில், மாவட்ட வரிசை நூல்கள், தனிமனித சாதனைக்கு ஓர் அடையாளம் என்றே கூறலாம். ஒவ்வொரு மாவட்டத்தைப் பற்றியும் குறிப்பிடும்போது அதன் இயற்கை அமைப்பு, அதில் வாழும் மக்கள், அவர்கள் செய்யும் தொழில், பழக்க வழக்கங்கள், பேச்சு வழக்கு,

ஊர்களைப் பற்றிக் குறிப்புகள் ஆகிய அனைத்தையும் தொகுத்தும் வகுத்தும் சுவைபட விளக்கியுள்ளார். ஒவ்வொரு மாவட்ட வரிசை நூலும், தமிழக வரலாற்றை அறிந்து கொள்வதற்குப் பொதுவாகவும் அம் மாவட்டத்தைப் பற்றி அறிந்து கொள்ளச் சிறப்பாகவும் உதவுகிறது. ஒவ்வொரு மாவட்ட வரிசையும் ஒரு கலைக்களஞ்சியம் போலவே திகழ்கிறது. இவ்வரிசை நூல்களை எழுதுவதற்கு சோமலெ பட்ட சிரமங்கள் கொஞ்சநஞ்சமல்ல. செய்திகளைச் சேகரிக்க அவர், ஊர் ஊராகச் சென்றிருக்கிறார். அதிகாரிகள், வரலாற்றுப் பேராசிரியர்கள், புலவர்கள் போன்ற பலதரப் பட்டோரையும் சந்தித்து அவர்களிடம் கலந்துரையாடி பல்வேறு விவரங்களைத் திரட்டி இருக்கிறார். இதற்காக, தமது உடல்நலத்தையும் பொருட்படுத்தாது அல்லும் பகலுமாக இப் பணியில் அலைந்தார். திரட்டிய செய்திகளை யெல்லாம் தொகுத்து வகைப்படுத்திச் சுவைபட எழுதியுள்ள பாங்கு அற்புதமானது.

**மூன்று நூல்கள்**

சோமலெ எழுதிய வாழ்க்கை வரலாற்று நூல்கள் மூன்று. அவை பண்டிதமணி கதிரேசன் செட்டியார், ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், சர்தார் வேதரத்தனம் ஆகியோரைப் பற்றியன. இப் பெரியார்களுடன் பழகி அவர்களிடம் கண்ட அருங்குணங்களை அழகாக இந்நூல்களில் சித்திரித்துள்ளார். அமெரிக்கா, ஆஸ்திரேலியா, இங்கிலாந்து உள்ளிட்ட பல்வேறு மேற்கு நாடுகளுக்கு அந்த நாளிலேயே சென்று திரும்பிய சோமலெ தமது உலகப் பயணத்தை முடித்துக் கொண்டு சென்னை திரும்பியபோது "நான் வணிகனாகப் புறப்பட்டுச் சென்றேன், எழுத்தாளனாகத் திரும்பி வந்தேன்" என்று சுவைபடக் கூறியது நினைவுகூரத் தக்கது. தமது வெளிநாட்டுப் பயண அனுபவங்களை நான்கு நூல்களாக வெளியிட்டுள்ளார். இவைபோக, 'வளரும் தமிழ்', 'செட்டிநாடும் செந்தமிழும்', 'பிரயாண இலக்கியம்', 'இமயம் முதல் குமரி வரை' என்ற நூல்கள் தமிழ்ப் பண்பாட்டின் இலக்கியங்கள். இவர் எப்பொழுது பார்த்தாலும் அடுத்த

நூலை எழுதுவதற்கான சிந்தனையிலேயே ஈடுபட்டிருப்பார். இதற்காகப் பல்வேறு நூல்களை ஓயாது படிப்பது இவருடைய வழக்கம். தம்முடைய நினைப்பு, நேரம் முழுவதையும் அவர் இதற்கே செலவிட்டதால் திரைப்படம், நாடகம், இசைநிகழ்ச்சி போன்றவற்றிற்குச் செல்வதற்கே இவருக்கு நேரம் கிடைத்ததில்லை.

உணவு, உடை, உறக்கம் பற்றிக் கவலைப்படாதவர். ஏன், தம் உடல்நலத்தில்கூட அவ்வளவு கவனம் செலுத்தமாட்டார். சதாசர்வகாலம் படிப்பதும், எழுதுவதுமே அவர் தொழிலாக இருந்தன.

சிறப்பு மலர்களைத் தயாரிப்பதிலும், பண்பாட்டு விழாக்களை முன்னின்று நடத்துவதிலும் இவருடைய திறமை அசாதாரணமானது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் பொன்விழா நடைபெற்ற பொழுது அதற்கான ஏற்பாடுகளை முன்னின்று கவனிக்கவும் விழாச் சிறப்பு மலரைத் தயாரிக்கவும் சோமலெயை அழைத்து அப் பல்கலைக்கழகம் இப் பொறுப்புகளை ஒப்படைத்தது.

13-ஆவது வயதில் எழுதத் தொடங்கிய சோமலெ ஆங்கிலத்தில் 20-க்கும் மேற்பட்ட நூல்களும், தமிழில் 60-க்கும் மேற்பட்ட நூல்களும் எழுதி அரும்பணியாற்றியிருக் கிறார்.

இவருக்குப் புதல்விகள் நால்வர். ஒரே ஒரு புதல்வரான சோமலெ. சோமசுந்தரம், இப்போது அமெரிக்காவில் புகழ்பெற்ற வேளாண்மை ஆய்வு நிலையம் ஒன்றில் விஞ்ஞானியாகப் பணியாற்றி வருகிறார். சோமலெவுக்கு தமிழர் தங்களுடைய நன்றிக்கடனை செலுத்துவதற்கு ஓர் ஏற்பாடு செய்வது அவசியம். அறக்கட்டளை ஒன்றை நிறுவி அவருடைய நூல்களை மறுபதிப்பு செய்வதோடு இதுவரை வெளியிடப்படாத நூல்களையும் வெளியிடுவதன் மூலம் தமிழ் இலக்கியத்திற்கு வளம் கூட்டிய இப்பெருமகனுக்கு நன்றி உணர்ச்சியைத் தெரிவித்துக் கொள்ள முடியும்.

*- நன்றி : தினமணி சுடர், மார்ச் 4, 1995*

## 8. அறிஞர் சோமலெ - ஓர் அறிவுப் பெட்டகம்

**பேராசிரியர் ஔவை நடராசன்**

*அறிஞர் 'சோமலெ' அவர்களை நான் பல ஆண்டுகளாக அறிவேன். அவர் என் தந்தைக்குத் தோழர். அதே வடிவத் தோடும், குன்றாத ஊக்கத்தோடும் பரிவோடு பழகிய அவரது நட்பை எனக்கு வாய்த்த திருப்பேறாக நான் கருதுகிறேன்.*

*கடமைகளை வரையறை செய்வதும், கருத்தூன்றி எதையும் ஆராய்வதும், முடிந்ததை 'முடியும்' என்று மொழிவதும், இல்லையென்றால் மறுகணமே வெடுக்கென மறுப்பதும் சோமலெயின் நல்லியல்புகளாகும்.*

*எந்த நேரத்திலும் தம் பையில் ஒரு குறிப்பேட்டோடு உலாவும் அவர், கண்ணில் படுவதை, கருத்தில் பதிவதை, 'அரிய செய்தி' என்று நினைப்பதை மறவாமல் தொகுத்து வைத்துக் கொள்கிற தம் கலையார்வத்திற்கு ஓர் அணிகல னாகக் கொண்டிருந்தார்.*

*'சிற்பம் சமைப்பது எப்படி' என்று சிற்பக் கலைஞரை ஒருவன் கேட்டபோது, 'பாறையை உற்றுப் பார்ப்பேன்; எனக்கு அந்தப் படிவம் அதில் தெரியும். மற்றவற்றை யெல்லாம் வெட்டி எறிந்து விடுவேன். சிற்பம் தானாக உருவாகிவிடும்' என்று சொன்னானாம். அதுபோல, வேண்டிய செய்திகளை மட்டும் எண்ணித் தொகுத்து அவற்றையும் பொருத்தமாகப் பொருத்திக் கொண்டால், எந்தக் கட்டுரையும், எந்த நூலும் எளிதில் அமைந்து விடும் என்பது சோமலெயின் படைப்பு நோக்கமாகும்.*

*தமிழகத்தில் நாம் அவரை ஒரு* ***'பல்கலைக் குரிசில்'*** *என்று பாராட்டி மகிழத்தக்க சுவடுகள் பல அவரிடம் பளிச்சிடக் காணலாம். விளம்பர விளக்கொளிக்குக் கூசிக் கொண்டு, நிழலோரங்களில் நின்றபடியே ஆக்கப்பணிகளைச்*

செய்துவந்த சோமலெ தமிழன்னைக்குப் புதிய அணிகலன் களைப் பூட்டி மகிழ்ந்தவர்.

திரு. சோமலெ கலை, வரலாறு, பண்பாடு, மொழி வளர்ச்சி, பொதுநலம், உயர்கல்வி, செய்தியியல், இதழியல், பொது அறிவுப் புலமை, சுற்றுலா, திருக்கோயில்கள் முதலிய பல துறைகளுக்குத் தமிழ்ஒளி சேர்த்து, ஆங்கிலத்திலும் தமிழிலும் தீங்கனிகளாகத் தம் எழுத்துக் கனிகளைப் படைத்தளித்திருக்கிறார்.

ஆதரவு தேடிவந்த பலருக்கும் நல்வாழ்க்கையை உருவாக்கியிருக்கிறார் என்பது என்னைப் போன்ற சிலருக்கு மட்டுமே தெரியும் என நம்புகிறேன்.

ஆள்பவராக, அரசியல் தூதுவராக, உலக நாடுகளில் உலா வருபவர்களுக்கு உற்ற துணையாக, சிந்தனையாளராக - என்று பல துறையினருக்கும் பாதை காட்டிய பண்பாளர் இவர் என்பதில் யாருக்கும் இரண்டாவது கருத்து இருக்க முடியாது.

திரு. சோமலெ அவர்களது திறமை, நாட்டுக்குக் கலங்கரை விளக்கம் போன்றது. டேல் சார்னீஜியை இவரோடு ஒப்பாக எண்ணலாம் என்று நான் கருதுவ துண்டு. இவரைப் பாராட்டுவது அறிவைப் பாராட்டுகிற, திறனைப் பாராட்டுகிற உண்மையானவர்கள் உவந்து செய்யும் திருப்பணியாகும்.

## 9. உலகம் சுற்றிய தமிழர்

**'இலக்கிய வீதி' இனியவன்**

'உலகம் சுற்றிய தமிழர்' என்கிற அடைமொழி 'சோமலெ' அவர்களுக்கு முற்றிலும் பொருந்தும்! அவர் செல்லாத நாடில்லை; சுற்றாத ஊரில்லை! ஆனால், எங்கே போனாலும், நெஞ்சம் தமிழர் நலனிலேயே நாட்டமா யிருக்கும்! அவரது பயணம் கண்களுக்கு மட்டுமானது அல்ல; கருத்துக்கே முதன்மையானது! அவரைப் பேச வைத்தால்,' தொட்டனைத் தூறும் மணற்கேணி' என வள்ளுவர் சொல்வாரே, அப்படி - ஆயிரம் செய்திவரும்!

சான்றோர் மதிக்கும் சாதனையாளரான சோமலெ அவர்களுக்கு, 27.2.83 அன்று **'இலக்கிய வீதி'** ஒரு பெரிய விழா எடுத்தது; அமைச்சர்களும், அறிஞர் பெருமக்களும் நிறைந்த சபையில் அவரை முறைப்படி சிறப்பிக்கும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத்தது!

அதுவரை எவர் வற்புறுத்தியும் பாராட்டுக்கு இணங்காமல் மறுத்தவர். **'இலக்கிய வீதி'**யின் சிறப்பை இதய பூர்வமாக ஏற்றுக் கொண்டார் என்பது ஒரு வரலாற்று நிகழ்ச்சி!

அளவற்ற தகுதிகளுடன் கூடிய அறிஞர் சோமலெ அவர்களால் தான், எனக்குப் பயண இலக்கியம் படைக்க ஆர்வம் வந்தது.

தமிழர் அனைவரும் தன்னிகரற்ற பொதுஅறிவு பெற, அவர் ஏராளமான நூல்களை எழுதினார்; அவை யாவும், தகவல் களஞ்சியங்களாகப் பயன்படுபவை.

'தமக்குப் பிறகு, பட்டி தொட்டிகளுக்கெல்லாம் சென்று - பயனான செய்திகளைத் தொகுத்து, பாருக்கு வழங்கப் பலரும் முன் வர வேண்டும்' என்று அவர் மிகவும் விரும்பினார்.

அவருக்கும் எனக்கும் அதிக வயது வேறுபாடு இருந்தது; ஆனாலும், இளமைக் கால நண்பர் போல் என்னிடம் எல்லையில்லாத அன்போடு பழகினார். உவகையுடன் பல ஊர்களுக்கு உடன் வந்து ஊக்கப்படுத்தினார்.

உதவிக்கு, கல்வெட்டு நிபுணர் கா. தியாகராஜனை அழைத்து வந்தார். உத்தரமேரூரிலும், திருமுக்கூடலிலும் உள்ள கல்வெட்டுகளை இவர் படித்துச் சொல்லுமுன், சோமலெ அவர்கள் பல செய்திகளைத் தெரிவித்து வியப்பில் ஆழ்த்தினார்! எந்த ஒரு சிற்றூரைப் பற்றியும், அந்த ஊர்க்காரர்களே ஆச்சரியம் கொள்ளும் அளவு அவரிடம் பல அரிய செய்திகள் இருந்தன!

உத்தரமேரூரில் ஒரு விழா ஏற்பாடு செய்து, அப்போது தமிழக அரசின் பழங்கலை இயக்கக இயக்குநராக இருந்த இசைப்பேரறிஞர் மீ.ப. சோமசுந்தரம் (சோமு) அவர்களைத் தலைமை வகிக்க வைத்தார்.

அமரர் சோமலெ அவர்களால் என் உள்ளத்தில் ஊன்றப்பட்ட பயண இலக்கிய வித்து, முத்தமிழ் வித்தகர் சோமு அவர்களால் முளைத்துத் தளிர்த்தது. அரசுக்காக, செங்கை மாவட்டம் (இன்று, காஞ்சி மாவட்டம்) முழுவதும் சென்று, 'கிராமக் களஞ்சியம்' ஒன்று தயாரித்து வழங்குகிற பொறுப்புக் கிட்டியது. அதைச் செம்மையாக எழுதி முடிப்பதில், சோமலெ அவர்கள் அணுக்கமாயிருந்து உதவினார்; பணி முடியும்வரை, என் இல்லத்திலேயே தங்கியிருந்து முழு மூச்சுடன் செயல்பட வைத்தார்!

*'அந்தப் படைப்பு, உரியவர்களின் பாராட்டைப் பெற்றதற்கு, அவரே காரணம்!' என்றால் மிகையல்ல.*

*என் சிற்றுலா அனுபவங்களைத் தொகுத்து - சிறுசிறு நூல்களாக்கி - அந்தந்த வட்டாரங்களில் வெளியிடுவதன் மூலம், அமரர் சோமலெ அவர்களின் நினைவை மிகவும் சரியான முறையில் போற்றியவனாகிறேன். அந்த அடிப்படையில் **'உத்தரமேரூர் உலா'** முதல் நூல் ஆகிறது. பயண நூல் வரிசையில், இது மிகவும் வித்தியாசமானது!*

*விரிவான வரலாற்றுச் செய்திகள், செவிவழிக் கட்டுக் கதைகள், சுவையான துணுக்குச் சங்கதிகள், நிகழ்கால உண்மைகள், நாளைய நம்பிக்கைகள் என்று பல தகவல் களை இந்தப் புத்தகத்திலிருந்து பெறலாம்!*

*இதற்கு, சோமலெ அவர்கள்தாம் ஆதாரம் என்பதை என்றென்றும் இதய நன்றியுடன் நினைத்திருப்பேன்!*

## 10. நினைவலைகளில் சோமலெ

### எஸ். சரவணன்*

*அன்பின் அடையாளம்*

பிறரிடத்தில் அன்பு காட்டுவதில் வல்லவர்கள். கனிவாகப் பேசும் குணம் கொண்டவர்கள்.

*இன்சொல்லின் இருப்பிடம்*

பிறருடன் பேசும்போது சிரித்த முகத்துடன் பேசுவார்கள். கோபமும் வரும். அர்த்தத்துடன் கோபித்துக் கொள்வார்களே தவிர, அர்த்தம் இல்லாமல் கோபித்தது கிடையாது.

*ஈகையின் இருப்பிடம்*

இல்லை என்றவர்களுக்குக் கொடுத்து உதவுவதில் அவர்களுக்கு நிகர் அவர்களே.

*உண்மையின் உறைவிடம்*

ஒரு விஷயத்தை முடிப்பதென்றால், அது முடியும், முடியாது என நேரடியாக உண்மையாகப் பேசி விடுவார்கள். அது, அடுத்தவர்களுக்குப் புண்படும்படியாகத் தெரியும். வெளிப்படையாக, உண்மையாகப் பேசி விடுவார்கள்.

*செய்வன திருந்தச் செய்யும் செம்மல்*

எந்தக் காரியத்தையும் செம்மையாக ஊக்கத்துடன் மிகவும் தைரியமாக முடிப்பதில் வல்லவர்கள்.

*எளிமையின் வடிவம்*

திரு. சோமலெ அவர்களின் எளிமை, எனக்கு மிகவும் பிடித்த ஒன்று. தோற்றத்தைப் பார்த்தால், இவர்களா, இவ்வளவு அறிவு பெற்ற சோமலெ எனத் தோன்றும். வேட்டி,

*1969 முதல் 1977 வரை சோமலெயிடம் உதவியாளராகப் பணியாற்றியவர்.

சட்டை இரண்டையும் எப்போதும் துவைத்து உடுக்கும் பழக்கம் கொண்டிருந்தார்கள். ஆடம்பரத்தை விரும்பாதவர்கள்.

### ஏழ்மையிலும் புன்சிரிப்பு

திரு. சோமலெ அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை பாலிடெக்னிக் இரண்டையும் விட்டு எழுத்துத் துறையில் முழுமையாக ஈடுபட்டு வரும் சமயத்தில்தான், நான் அவர்களுடன் பணியாற்றும் வாய்ப்புக் கிடைத்தது. அவர்களின் இரண்டு பெண்பிள்ளைகளுக்குத் திருமணம் முடிந்து, இன்னும் இரண்டு பெண் பிள்ளைகள் பருவமடைந்து திருமணம் செய்யும் நிலையிலும், கடைசியாக மகன் திரு. சோமசுந்தரம் அவர்கள் 5-ஆவது வகுப்புப் படித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அவர்கள் சென்னை பவளக்காரத் தெரு ரங்கூன் நகர விடுதியில் தங்கிக் கொண்டு, குடும்பத்தினரைத் தமது சொந்த ஊரான நெற்குப்பையில் வைத்துவிட்டு மகனின் எதிர்காலம் நன்றாக இருக்க வேண்டுமே என்ற குறிக்கோளுடன், மகனை திருவான்மியூர் பெசன்ட் தியாசாப்பிக்கல் பள்ளியில் படிக்க வைத்துக் கொண்டு இருந்தார்கள்.

### கையும் கைப்பையுமாக...

திரு. சோமலெ அவர்கள், எங்கே சென்றாலும் தம்முடன் ஒரு கைப்பை (Hand bag)யுடன் செல்வார்கள். அதில், சிறிய குறிப்பு நகல் புத்தகம், பேனா, தமது முகவரி, அவர்களுடன் நெருங்கிப் பழகும் முக்கிய நபர்களின் முகவரிகள், தொலைபேசி எண்கள், தம்முடைய பாஸ்போர்ட் சைஸ் புகைப்படம் அனைத்தையும் வைத்திருப்பார்கள். 'பேனாவும் சிறிய துண்டுக் காகிதமும் இல்லாமல் வெளியில் செல்லாதீர்கள்' என்று அடிக்கடி சொல்லுவார்கள்.

### அன்றாடப் பணிகள்

காலையில் எழுந்ததும் எல்லா ஆங்கிலப் பத்திரிகைகள், எல்லாத் தமிழ்ப் பத்திரிகைகளையும் படிப்பார்கள்.

படிப்பதற்கு முன்பாக, ஒரு சிறிய கத்திரிக்கோல் கையில் இருக்கும். பத்திரிகைகளில் அரசு சொல்லியுள்ள முக்கிய தகவல்கள், மாவட்டங்களைப் பற்றிய முக்கியக் குறிப்புகள் போன்ற முக்கிய தகவல்களை வெட்டி எடுத்து, அந்தந்தக் குறிப்புகளை அதற்கென வைக்கப்பட் டுள்ள அட்டைப் பெட்டிகளில் வைக்கச் சொல்லுவார்கள். அன்றைய தினமே அந்தப் பத்திரிகை, பழைய பேப்பர்களைப் போடும் பெட்டிக்குப் போய்விடும். பிறகு, காலைக் கடன்களை முடித்துவிட்டு, குளித்து, சுவாமி கும்பிட்டு, காலைப் பலகாரம் சாப்பிட்டு விட்டு, அச்சகம் மற்றும் பிற அலுவலகங்களுக்குச் செல்லும் பணியினைத் தொடருவார் கள். செல்வதற்கு முன்பு, நான் பகல் சாப்பாட்டிற்கு வருவேன் / வரமாட்டேன், அவர் மட்டும் (அதாவது என்னை) வருவார் என்று சொல்லிவிட்டுச் சென்று விடுவார்கள். மாலை வீட்டிற்குத் திரும்புவதற்கு முன்பு, அடிக்கடி தொலைபேசி மூலம் யாரிடமிருந்தாவது போன் வந்ததா எனக் கேட்டுத் தெரிந்து கொண்டு, நான் இப்போது இந்த இடத்தில் இருக்கிறேன், இத்தனை மணிக்கு இந்த இடத்தில் இருப்பேன் என்ற விவரங்களைச் சொல்லுவார்கள். வீட்டை விட்டுக் கிளம்பும் முன்பாக யாரைப் பார்க்க வேண்டும் என்பதற்கான குறிப்புடன் செல்வார்கள். பார்க்கச் செல்லும் நபருக்கு, முன்கூட்டியே, இத்தனை மணிக்குத் தங்களைச் சந்திக்க வருகிறேன் எனத் தொலைபேசி மூலம் சொல்லி விடுவார்கள். அந்த நேரத்திற்கு ஐந்து நிமிடங்கள் முன்னதாக அங்கு இருப்பார்கள். சிறிது நேரம் காத்திருந்து குறிப்பிட்ட நபர் வரவில்லை என்றால், நான் வந்ததாகச் சொல்லுங்கள் என்பதை ஒரு பேப்பரில் எழுதி, நாளை வருகிறேன் அல்லது தொலைபேசியில் தொடர்பு கொள்கிறேன் என்று கொடுத்துவிட்டுச் சென்று விடுவார்கள், அடுத்த நபரை அவர்கள் சொன்ன நேரத்தில் சந்திக்க வேண்டும் என்பதற்காக, ஓரிடத்திற்குச் சென்று, அங்கு வேலை முடிந்துவிட்டால், அந்த இடத்தை விட்டு

உடனே சென்றுவிடுவார்கள். அவர்களைச் சந்திக்க வரும் நபரையும் காக்க வைக்காமல் பதில் சொல்லி அனுப்பி விடுவார்கள். மாலை வீட்டிற்கு வந்ததும் காப்பி சாப்பிட்டு விட்டு, ஏதேனும் எழுத்து வேலைகளைக் கவனித்துவிட்டு, கடிதங்களைப் பார்த்த பிறகு, அவற்றிற்கு 2 வரிகளில் பதில் எழுதிவிட்டு, இரவுச் சாப்பாட்டை முடித்துவிட்டு, இரவு 7½ - 8 மணிக்கெல்லாம் அவர்களே படுக்கையை விரித்துக் கொண்டு படுத்துக் கொள்வார்கள். நாம் எடுத்து விரித்துக் கொடுத்தால் மறுத்து விடுவார்கள். படுக்கையில் இருந்து கொண்டு அன்று எங்குச் சென்று வந்தோம், யாரைச் சந்தித்தோம், என்ன வேலைகளை முடித்தோம் என்பதை நாட்குறிப்புப் புத்தகத்தில் எழுதி விட்டு, படுத்துக் கொள்வார்கள். இரவில் சிறிது சத்தம் கேட்டாலும் விழித்துக் கொள்வார்கள்.

வெளியூர்களுக்குச் செல்வதென்றால் முன்கூட்டியே டிக்கெட் எடுத்து விடுவார்கள். இரண்டு தினங்களுக்கு முன்பே வேண்டிய பொருட்களை எடுத்து வைத்து, அந்தப் பெட்டிகளைத் தனியாக வைத்து விடுவார்கள். ரயிலுக்குச் செல்லவேண்டிய நேரத்திற்கு ஒரு மணிநேரம் முன்னதாக வீட்டிலிருந்து கிளம்பி விடுவார்கள். மெதுவாகச் செல்லலாமே என்று சொன்னால், எந்த நேரத்தில் எந்த ஊர்வலம் நடக்குமோ, நிகழ்ச்சிகள் நடக்குமோ, அதனால் நாம் நேரத்திற்குப் போய்ச்சேர முடியாது, எனவே முன்னதாகச் செல்வதுதான் நல்லது எனச் சொல்லுவார்கள்.

வரும் கடிதங்களுக்குப் பதில் எழுதுவதில் சலிப்பே இருக்காது. எத்தனைக் கடிதங்கள் வந்தாலும் அதற்கான பதிலை உடனே இரண்டு வரிகளிலேயே பதில் எழுதி அனுப்பிவிடுவார்கள். எந்த நேரத்திலும் கார்டு, கவர், ஸ்டாம்ப் தம்மிடத்தில் வைத்திருப்பார்கள். முக்கியமான நபர்களின் தொலைபேசி எண்களை ஓர் அட்டையில் எழுதி ஆணியில் தொங்க விட்டிருப்பார்கள்.

சாப்பாட்டிற்கு முக்கியத்துவம் கொடுப்பது இல்லை. எந்த உணவு என்றாலும் கவலைப்படுவதில்லை. ருசியைப் பற்றியும் ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. ஆடம்பரத்தை விரும்பாதவர்கள். கையில் ஒரு மோதிரம் கூட அணிந்து கொள்ள மாட்டார்கள்.

**அஞ்சல் நிலையத்தில் முடிந்த அற்புத வாழ்வு**

திரு. சோமலெ அவர்கள், **1986-ஆம் ஆண்டு** நவம்பர் **4-ஆம்** தேதி சென்னை அண்ணாசாலை தபால் நிலையத்தில் கழிவறைக்குச் சென்றபோது, மயக்கம் போட்டு விழுந்து விட்டார்கள். அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் சென்று தூக்கி அவர்கள் வைத்திருந்த கைப்பையைப் பார்த்து, அதில், கற்பகம் அச்சகம் தொலைபேசி எண் மற்றும் திரு. ஏ.வி.எம். சரவணன் அவர்களின் தொலைபேசி எண் இருந்தது. அந்த எண்களுடன் தொடர்புகொண்டு சொன்னோம். கற்பகம் அச்சகத்தினர், அவர்கள் வீட்டிற்குத் தொலைபேசி மூலம் தொடர்பு கொண்டு சொன்னார்கள். அப்போது, நான் சென்னை அறநிலையத் துறை அலுவலகத்தில் பணியாற்றி வந்தேன். எனக்கு, அவர்கள் புதல்வி சீதா மூலம் தகவல் வந்தது. உடனே, சாஸ்திரி நகர் வந்து சேர்ந்தேன். திரு. சோமலெ அவர்களை உட்கார்ந்த நிலையில், கற்பகம் அச்சகத்தினர் காரில் வீட்டிற்குக் கொண்டு வந்தார்கள். நானும் சீதாவும் போய்ப் பார்த்து இந்திராநகர் மருத்துவமனைக்குக் கொண்டு சென்று பார்த்தோம். உயிர்பிரிந்து வெகுநேரம் ஆகிறது எனச் சொல்லிவிட்டார்கள். பிறகு உறவினர்களுக்குத் தகவல் கொடுத்து இறுதிச் சடங்கினை, அவர்கள் மகன் திரு. சோமசுந்தரம் அவர்கள் அமெரிக்காவிலிருந்து வந்ததும் முடித்தோம். அடக்கமும் திருவொற்றியூரில் நடந்தது.

அவர்கள் உயிர் பிரிந்தாலும், அவர்களின் நினைவலைகள் இன்னும் மாறாமல் நிற்கின்றன என்பது மட்டும் உறுதி.

## 11. பத்திரிகையாளர் பார்வையில் சோமலெ

● *கேள்வி : மறைந்த சோமலெயிடம் தங்களைக் கவர்ந்த அம்சம் எது?*

● *பதில்:* 'எதையும் நுணுகி ஆராய்ந்து எழுதியவர். அவருடைய பல அரிய தகவல் நூல்களில் 'செட்டிநாடும் செந்தமிழும்' என்பது ஒன்று. அதில் பலரைப் பற்றியும் எழுதித் தலையணை அளவுக்குப் புத்தகம் போட்ட அவர், தம்மைப் பற்றி ஒரு வார்த்தை கூட எழுதிக் கொள்ளாத அடக்கம் என்னை இன்னமும் வியக்க வைக்கிறது. அவர் மறைந்த சமயத்தில், 'அவர் தமது தேவைகளையும், ஆசைகளையும் குறைத்துக் கொண்டதால்தான், தமக்குச் சரி என்று பட்டதைத் தைரியமாகச் சொல்லவும் செயல்படுத்த வும் முடிந்தது' என்று ஆர்.எம். வீரப்பன் சொன்னார். இதைவிடவும் உண்மையான, சுருக்கமான, சிறந்த பாராட்டு வேறு இருக்க முடியாது.

- *'கல்கி' இதழ்*

● *கேள்வி: மறைந்த எழுத்தாளர் சோமலெவுடன் உங்களுக்குப் பழக்கம் உண்டா?*

● *பதில் :* அறிமுகம் உண்டு. தலைமுறை இடைவெளி இருந்ததால் நெருங்கிப் பழகச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. ஆனால் அவர் மறைவிற்கு ஒரு வாரம் முன்னர்தான் அவருடன் மூன்று தினங்கள் உடன் இருக்க நேரிட்டது. கொச்சின், சோட்டாணிக்கரை, காலடி, பெரும்பாவூர் என்று அவரும் நானும் சுற்றுசுற்றென்று சுற்றினோம். என் இளமைத் துள்ளலுக்கு ஈடுகொடுத்து அத்தனை இடங்களுக்கும் இளம்பிள்ளை போல் அலைந்ததை மறக்க முடியாது. தான் சிரிக்காமல் வாக்கியத்துக்கு வாக்கியம் ஏதேனும் சொல்லிச் சிரிக்க வைப்பார். அவரைப் போன்றதொரு நடமாடும் தகவல் களஞ்சியத்தை வாழ்வில் நான் இனிமேல்தான் காண வேண்டும். மாவட்டங்களைப் பற்றி எழுதி, மாநிலங்களைப் பற்றி எழுதி, உலக நாடுகளைப் பற்றி எழுதி வரலாறு படைத்த எழுத்தாளர் அவர்.

- *'கல்கண்டு' இதழ்*

## 12. சமயப் பணியிலும் மொழிப் பணியிலும் முன்னின்றவர்

தமிழில் பயண இலக்கியம் பற்றி எண்ணிப் பார்க்கும் போது உடனே நினைவுக்கு வரும் பெயர்களில் குறிப்பிடத் தக்கது. 'சோமலெ' சமூகவியலின் அடிப்படையில் ஆய்வுக் கண்ணோட்டத்துடன் எழுதப்பெறும் நூல்களை எவரும் சுவாரசியமாகப் படிக்கத்தக்க வகையில் எழுத முடியும் என்பதை நிரூபித்தவர் அவர். ஆதாரம், அவர் எழுதிய 'செட்டிநாடும் தமிழும்' என்ற நூல்.

தமிழ்நாட்டின் மாவட்டங்களைப் பற்றி ஒவ்வொரு மாவட்டமாக எடுத்துக்கொண்டு அவர் எழுதிய நூல் வரிசை, தமிழ்நாட்டின் வரலாறு, பூகோளம், பண்பாடு ஆகிய விவரங்களின் தொகுப்பாக அமைந்து, தமிழ்நாட்டைப் பற்றி விரிவாகத் தெரிந்துகொள்ள உதவும் வழிகாட்டியாக விளங்கிவருகிறது.

இப்படிப் பலவிதங்களில் தமது எழுத்தாற்றலின் மூலம் தமிழுக்கு நிரந்தரமான தொண்டு புரிந்திருக்கும் 'சோமலெ' கடந்த நவம்பர் மாதம் நான்காம் தேதி திடீரென மறைந்து விட்டதாகத் தகவல் கிடைத்தபோது அதிர்ந்து போனேன்.

அமெரிக்கா, ஆஸ்திரேலியா, பிரிட்டன் ஆகிய நாடுகளிலும் சுற்றுப்பயணம் செய்து அந்த நாடுகளைப் பற்றிய பயண நூல்களை எழுதியிருக்கிறார், சோமலெ. இங்குள்ள பென்சில்வேனியா பல்கலைக்கழகத்திற்கு இந்தியவியல் பாடத் திட்டங்களுக்கான ஆலோசகராகவும் இருந்தவர் அவர்.

தொடக்க முதலே பல்கலைக்கழகத் தொடர்புகள் உள்ளவராகத் தான் இருந்து வந்திருக்கிறார், சோமலெ. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் மக்கள் தொடர்பு அதிகாரியாக இருந்திருக்கிறார், அவர். அவரது பயண

*நூல்கள் பல கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் பாட நூல்களாகப் பயன்பட்டு வருகின்றன.*

*சோமலெ தமிழுக்குச் செய்திருக்கிற இன்னொரு தொண்டு, சாகித்ய அகாடமிக்காக 1901 முதல் 1953 வரை தமிழில் வெளிவந்த நூல்களைப் பற்றிய விவரத்தொகுப்பு ஒன்றைத் தயாரித்து அளித்தது.*

*சமயப் பணியிலும் தாய்மொழிப் பணியிலும் முன்னிற்பவர்கள் என்ற பாராட்டைப் பெற்றவர்கள் செட்டிநாட்டுப் பெருமக்கள். அந்தச் சமூகத்திலிருந்து வந்தவரான 'சோமலெ', என்கிற சோம. லட்சுமணன் செட்டியார் மட்டும் எப்படி இதற்கு விதிவிலக்காக இருக்க முடியும்?*

*- வாழும் தமிழ் உலகம், டிசம்பர், 1986*

## 13. நகரத்தார் குரலாக விளங்கியவர்

*பல நாடுகளைப் பற்றியும், பல மாவட்டங்களைப் பற்றியும், பலவிதமான மனிதர்களைப் பற்றியும் அறிஞர் நெற்குப்பை சோமலெ அவர்கள் ஏராளமான நூல்களை எழுதியிருக்கிறார்கள். அவை அனைத்தும் அறிவுக் களஞ்சியங்கள்.*

*நகரத்தார்களைப் பற்றி அவர்களுக்குத் தெரியாத தகவல்கள் எதுவும் இருக்க முடியாது. ஒவ்வொரு நாட்டைப் பற்றியும் ஒவ்வொரு மாவட்டத்தைப் பற்றியும் ஒவ்வொரு மனிதரைப் பற்றியும் தெளிவான குறிப்புகளை அவர்கள் வைத்திருக்கிறார்கள்.*

*'தமிழ்நாடு' பத்திரிகையில் நான் பணியாற்றிக் கொண்டிருந்தபோதே அவர்களை அறிவேன். என்றாலும் 'நகரத்தார் குரல்' இதழ் தொடங்கப்பெற்ற பிறகுதான் அவர்களுக்கும் எனக்கும் அதிக நட்பு ஏற்பட்டது.*

*'நகரத்தார் குரல்' தொடங்கப்பெற்ற சில மாதங்களுக்குப் பிறகு நம் சமூகம் முன்னேறுவதற்குச் சில ஆலோசனைகளைக் குறிப்பிட்டுக் கட்டுரை எழுதியனுப்பி வைக்குமாறு கேட்டு அவர்களுக்கு இரண்டொரு கடிதங்கள் எழுதினேன். அதற்கு அவர்கள் 13-12-82 அன்று நான்கு பக்கங்கள் அளவில் ஒரு பதில் கடிதம் எழுதியிருந்தார்கள்.*

*அதில் -*

*"தங்கள் வேண்டுகோளை ஏற்றுக் கட்டுரை எழுதினால் வம்பு; எழுதாவிட்டால் பழி; காரணம் என் எழுத்துக்கள் கடுமையானவை" என்று குறிப்பிட்டு நம் சமூகத்தின் நெறிமுறைகள், பழக்க வழக்கங்களைச் சாடி விரிவாக எழுதியிருந்தார்கள்.*

*அந்தக் கடிதத்திற்குப் பிறகு நான் அவர்களிடம் கொண்ட பயம் காரணமாகத் தொடர்ந்து கடிதம் எழுதாமலேயே இருந்து விட்டேன்.*

*பிறகு செப். 85 வாக்கில் ஒரு கடிதம் எழுதினேன். அதற்கு நல்லவிதமாக அவர்கள் பதில் எழுதினார்கள். தொடர்ந்து எழுதினேன். அவர்களும் நல்ல நல்ல செய்திகளை அனுப்பிய வாறு உடனுக்குடன் பதில் எழுதி வந்தார்கள். கடந்த 12 மாதங்களில் மட்டும் எனக்கு அவர்கள் சுமார் 100 கடிதங்கள் எழுதியிருப்பார்கள். அந்த அளவு என்னிடம் நெருக்கமாக இருந்த அவர்களை ஆண்டவன் பிரித்துவிட்டான்.*

*"என் பெயர் வருவதை நான் விரும்பவில்லை. எனக்கு விளம்பரம் தேவையில்லை. என் பெயர் போடாமல் செய்திக்கு முக்கியத்துவம் கொடுங்கள். நமக்குக் காரியம்தான் முக்கியம்" என அடிக்கடி எழுதி வந்தார்கள்.*

*கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுதுவதில் அவர்களைப் போல் வேறு யாரும் இருக்க முடியாது.*

*சோமலெ அவர்கள் கடந்த ஓராண்டுக் காலமாக நம் இதழுக்கு ஏராளமான யோசனைகளைத் தெரிவித்திருப்ப தோடு நல்ல நல்ல செய்திகளையெல்லாம் சேகரித்து அனுப்பியிருக்கிறார்கள். 'நகரத்தார் முன்னோடிகள்' என்று நம் இதழ்களில் வந்த தொகுப்பெல்லாம் அவர்கள் அனுப்பி யவைதான்.*

*"நகரத்தார் பத்திரிகைகள் எத்தனையோ வெளி வந்துள்ளன. ஆனால் 'நகரத்தார் குர'லின் சிறப்பு வேறு எதற்கும் இருந்ததில்லை" என்று அடிக்கடி கூறி வந்தார்கள்.*

*'நகரத்தார் குரல்' நல்ல பத்திரிகை. அது மாதம் இருமுறையாக வெளிவரவேண்டும். வி.என்.சிடி. அவர்களிடம் இதுபற்றிப் பேசுங்கள். அப்படிச் செய்தால் நான் ஒவ்வொரு இதழுக்கும் எட்டுப் பக்கங்களுக்குக் கட்டுரைகள், செய்திகள் அனுப்புகிறேன்" என்று அவர்கள் எழுதியிருந்தார்கள்.*

*பாடுவார் முத்தப்பர் கோட்டம் அமைக்க அவர்கள் அரும்பாடுபட்டார்கள்.*

*பொதுப் பணிகளில், தமிழ்ப் பணிகளில் ஆர்வமுடன் ஈடுபட்ட நல்ல தமிழறிஞரை, சிறந்த சிந்தனையாளரை இழந்து தவிக்கும் நமக்கு யார்தான் ஆறுதல் கூறமுடியும்?*

## 14. அந்தக் கடைசிப் பயணம்

### லேனா தமிழ்வாணன்

கொச்சின் முத்தமிழ்ச் சங்க விழாவில் கலந்துகொள்ள எனக்கு அழைப்பு வந்தபோது தயங்காமல் அதை நான் ஏற்றுக்கொண்டேன். சக பேச்சாளர்கள் திரு. அழ. வள்ளியப்பா, திரு. சோமலெ என்றார்கள். இந்த நாடறிந்த நகரத்தார் பெருமக்களோடு நானும் பேசப் போகிறேன் என அறிந்தபோது மிக மகிழ்ச்சியாக இருந்தது. ஆனால் பின்னர் அழ. வள்ளியப்பா அவர்கள் தாம் வர இயலாமல் இருப்பதை மிக முன்னதாகவே-அழைப்பு அச்சடிப்பதற்கு முன்பே - தெரிவித்துவிட்டார்கள் (நல்ல பண்பு!).

நான் திரு. சோமலெவுக்குப் ஃபோன் செய்து கொச்சினுக்குப் போகும் இரயில் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டேன். ஸ்டேஷனில் அவர்களைச் சந்திக்கிறேன் எனச் சொன்னவன் பரபரப்பில் அதை மறந்தே போனேன். இரயில் புறப்படும் வரைக்கும் சோமலெ அவர்கள் என்னைப் பெட்டி பெட்டியாகத் தேடியிருக்கிறார்கள். என்ன ஒரு பண்பு பாருங்கள்!

அன்றைக்கென்று என் பெயரை 'T. வேலு' என்று இரயில்வே சார்ட்டில் டைப் செய்திருக்கிறார்கள். ஓரெழுத்து ஈரெழுத்தில் தவறு நேர்வது இயல்புதான். இப்படியா பெயரையே மாற்றுவார்கள்?

சோமலெ அவர்கள் நான் வரவில்லை என நினைத்துத் திரும்பத் தம் இடத்திற்குப் போய்விட்டார்கள். கொச்சின் டவுன் ஸ்டேஷனில் போய் இறங்கியதும் தான் சோமலெ அவர்கள் என்னைச் சென்னை ஸ்டேஷனில் தேடியது தெரிய வந்தது. சாதாரணமாக, யாரையும் அப்படித் தேடிப் போய்ப் பார்ப்பது அவர்களுக்குப் பிடிக்காத செயல். ஆனால், இந்த இளையவனிடத்தில் அவர்கள் கொண்டிருந்த அன்பு என்னை நெகிழ வைத்தது.

முத்தமிழ்ச் சங்கத்தின் செயலாளர் (செயல் வீரர்!) திரு.அ.சொ. சிவப்பிரகாசம் ரோஜாப் பூக்களைக் கிளையோடு கொடுத்து வரவேற்றார்கள். "பார்த்தீர்களா! சிவப்பிரகாசம் என்ன செஞ்சாலும் அது வித்தியாசமா இருக்கும். வாழ்க்கைங் கிறது முள்ளும் மலரும் நிறைஞ்சதுன்னு சொல்லாமச் சொல்லிட்டாங்க" என்று சோமலெ அவர்கள் விளக்கமளித் ததை நான் மிகவும் இரசித்தேன்.

சோமலெ அவர்கள் உடனிருந்த மூன்று நாட்களும் எங்களைச் சிந்திக்கவும் சிரிக்கவும் வைத்தார்கள்.

சோமலெ அவர்களின் சுபாவம் உலகம் அறிந்தது. அவர்கள் சற்றுக் கண்டிப்பானவர்கள்; எதையும் முகத்துக்கு முகம் நேரடியாகச் சொல்லக் கூடியவர்கள். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசத் தெரியாதவர்கள்.

'ஒரு நல்ல நண்பர் இந்தப் பயணத்தின்போது உடன் இல்லையே' என்று எண்ணமுடியாதபடி தலைமுறை இடைவெளி என்பார்களே, அதைக் குறைத்துச் சிறந்ததொரு நண்பரைப் போல் பழகினார்கள். அவர்கள் மிகப் பிரியமாய்ப் பழகியதும் என் மகன்களும் 'ஐயா, ஐயா' என்று அவர்களிடம் ஒட்டிக் கொண்டார்கள்.

சோட்டாணிக்கரை பகவதி அம்மன் கோயில், சங்கரர் பிறந்த காலடி, கொச்சின் நகரச் சுற்றுலா என்று முத்தமிழ்ச் சங்கத்தின் தயவில் சுற்று சுற்றென்று சுற்றிய வேளையில் சின்னப் பிள்ளையாய் என்னை விட வேகமாக அவர்கள் நடந்தபோது, 'உணர்வில் மட்டுமல்ல, உடலாலும் இளைஞராக இருக்கிறார்களே' என நான் வியந்து போனேன். எங்கே புறப்பட்டாலும் அசராமல் "நான்கு சுவர்களுக்குள் இருப்பதில் என்ன பயன் சொல்லுங்க?" என்று கிளம்பினார்கள்.

முன்னர் சொன்ன எல்லா இடங்களைப் பற்றியும் அவர்கள் சரித்திரபூர்வமாக, பூகோள பூர்வமாக, பக்திப் பூர்வமாக எனக்குத் தெளிவாகச் சொன்னார்கள். 'எப்படி இவ்வளவு விஷயங்களையும் நினைவில் வைத்திருந்து சொல்கிறார்கள்' என நான் வியந்து போனேன். எந்தத் தலைப்பு என்றாலும் அதைப் பற்றிக் கம்ப்யூட்டர் மாதிரி

விவரங்களை எடுத்துத் தந்து அசத்தினார்கள். நடமாடும் பல்கலைக் களஞ்சியமாக அவர்கள் இருந்தார்கள் என்றால் அதில் மிகையில்லை. அவர்கள் உடன் இல்லாவிட்டால் பயணமே டல்லடித்திருக்கும். சென்ற இடங்களிலெல்லாம் அவர்கள் குறிப்புக்களை எடுத்துக் கொண்டார்கள். அங்கங்குத் தரப்பட்ட வெளியீடுகளைப் பத்திரப்படுத்திக் கொண்டார் கள். நானோ வாங்காமல் நடந்தேன்.

கொச்சின் முத்தமிழ்ச் சங்க வரவேற்புக் கவிதையில் திரு. அ.சொ. சிவப்பிரகாசம், ஆயிரம் பிறை கண்டவர் என்பதாக வாழ்த்தினார்கள். சோமலெ அவர்கள் மேடையை விட்டுக் கீழே இறங்கியதும், "என்ன சிவப்பிரகாசம்! எனக்கு அறுபத்தைந்துதான் ஆகுது; எண்பதாக்கிட்டீங்களே!" என்றார்கள் வேடிக்கையாக. சிவப்பிரகாசம் அவர்களோ, "நீங்க அதைவிட அதிக வருஷம் வாழணும் அம்மான்" என்றார்கள். (திரு. சிவப்பிரகாசமும் திரு. சோமலெவும் உறவுக்காரர்கள்). "இல்லையில்லை, எனக்குச் ஜாதகப்படி இன்னும் ஏழு வருஷம்தான்" என்றார் சோமலெ. அவர்கள் அப்படிச் சொன்னதே எனக்குப் பெரும் சங்கடத்தைத் தந்தது.

காரணம், அவர்களைப் போன்றவர்கள் நீண்ட காலம் வாழ்வது நமக்கெல்லாம் பெருமை. பயண இலக்கியத்திலும், பண்பாட்டுத் துறையிலும் மாவட்டமென்றும், மாநில மென்றும், தேசீயமென்றும், உலகமென்றும் அவர்கள் படைத்த அருமையான படைப்புக்களை இனி ஒருவர் படைக்க முடியுமா என்பது ஐயமே!

'செட்டிநாடும் செந்தமிழும்' என்கிற அவர்களது அற்புதமான படைப்புக்கு இணையாக வேறு எவரேனும் ஒரு நூலை உருவாக்க முடியுமா?

அத்தனைக் காலம் அவர்களை வெகு தொலைவிலிருந்து புருவம் உயர்த்திய கண்களோடு கவனித்துக் கொண்டிருந்த நான் அவர்கள் மறைவை ஒட்டிய நாட்களிலா இப்படி நெருங்கிப் பழக வேண்டும்?

அவர்களைப் பற்றிய நினைவு திரும்பத் திரும்ப, வளைய வளைய வருவதைத் தவிர்க்க முடியவில்லை! என்ன செய்வது?

## 15. செந்தமிழ்த் தேனீ

### பேராசிரியர் இரா. மோகன்

அமரர் சோமலெ அவர்களை நினைக்கும் போது எத்தனையோ நினைவுகள் என் நெஞ்சக் கடலில் அலை மோதுகின்றன. மறைவதற்கு ஓரிரு மாதங்களுக்கு முன் நானும் மணிவாசகர் நூலாக உரிமையாளர் திரு. ச. மெய்யப்பன் அவர்களும் சோமலெ வீட்டிற்குச் சென்றிருந்தோம். சோமலெ இன்முகத்தோடு வரவேற்றுப் பேசிக்கொண்டிருந் தார்கள். ஒரு பெட்டியைக் காண்பித்து 'இது என்ன தெரியுமா?' என்று என்னைப் பார்த்துக் கேட்டார். சிரித்துக் கொண்டே 'தெரியாது, சொல்லுங்கள்' என்றேன். 'இதற்குள் புதுக்கோட்டை மாவட்டம் இருக்கிறது' என்றார் சோமலெ. ஒரு புத்தகம் எழுதும் போது அப்புத்தகம் தொடர்பான அனைத்துப் பொருள்களையும் ஒரு பெட்டியில் வைத்திருப்பது தம் வழக்கம் என்றார்; புத்தகத்திற்குப் பயன்படும் சிறு குறிப்பினைக் கூட விட்டு விடாமல் பத்திரமாக ஒரு பேருந்துப் பயணச் சீட்டில் குறித்து வைத்திருந்தார். 'தேனீ கூட இவரிடத்தில் வந்து சுறுசுறுப்பைப் பயிலும்' என்று நான் அன்று கண்டுகொண்டேன்.

ஒரு முறை வைகை எக்ஸ்பிரஸில் இருவரும் எதிர்பாராமல் சந்தித்துக் கொண்டோம்; நெடுநேரம் பேசி மகிழ்ந்தோம். ஏதோ ஓர் உணவுப் பொருள் வாங்கினோம்; சூடாக இருந்தது; ஆனால் சுவையாக இல்லை. சோமலெ அவர்கள் சிரித்துக் கொண்டே சொன்னார்: "எங்க பக்கத்திலே ஒரு பழமொழி உண்டு, 'சூடு ஒரு ருசி, சிவப்பு ஒரு அழகு'ன்னு. எவ்வளவு சரியா இருக்கு பார்த்தீங்களா?" அருமையான அந்தப் பழமொழியைப் பயன்படுத்தும்போதெல்லாம் சோமலெ அவர்களின் நினைவு வந்து என்னை மகிழ்விக்கும்.

ஏட்டுச் சுவடியாக இருந்த 'நகரத்தார் குளுவ நாடகம்' என்னும் சிற்றிலக்கிய வகையை என் துணைவியார் நிர்மலா 'நகரத்தார் மலர்' இதழில் வெளியிட்டு அறிமுகம் செய்தார்; பேராசிரியர் தமிழண்ணல் அவர்கள் குறிப்புரை எழுதினார்கள். என்னைப் பார்க்கும் போதெல்லாம் அதனை எடுத்துச் சொல்லி, என் துணைவியை நெஞ்சாரப் பாராட்டுவார் சோமலெ.

அன்று 'தந்தை மகற்கு ஆற்றும் நன்றி'யைச் சோமலெ, சோமசுந்தரத்திற்குச் செய்தார்; இன்று 'மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி'யைச் சோமசுந்தரம் செய்து வருகிறார். 'தந்தது உன்தன்னை; கொண்டது என்தன்னை; யார்கொலோ சதுரர்?' என்ற மணிவாசகர் வாக்குத்தான் எனக்கு நினைவிற்கு வருகின்றது.

## 16. தந்தையார் சொன்ன அறிவுரை

**சீதா குமரப்பன்***

சோமலெ அவர்கள் எளிய தோற்றமுடையவர்; ஆடம்பரத்தை விரும்பாதவர்; முன்கோபம் அதிகம் உள்ள மனிதர்.

தினமணி, ஹிந்து (Hindu), இந்தியன் எக்ஸ்பிரஸ் என்ற மூன்று தினசரி பத்திரிகைகளை வாங்குபவர். அப்பத்திரிகைகளை வாங்கிய இரண்டு மணி நேரத்திற்குள் அவற்றைப் படித்துத் தேவையானவற்றை வெட்டி எடுத்துக்கொண்டு, உடனே பழைய பேப்பரில் போட்டுவிடும் சுறுசுறுப்பான எழுத்தாளர்.

'உலகம் சுற்றிய தமிழர்' என்ற பட்டப்பெயரைப் பெற்றவர் என் தந்தை சோமலெ.

'செட்டிநாடும் செந்தமிழும்', 'அமெரிக்காவைப் பார்', 'மாவட்ட வரிசை நூல்கள்', 'கும்பாபிஷேக மலர்கள்' எனப் பல நூல்களை வெளியிட்ட பெருமை என் தந்தை சோமலெவுக்கு உண்டு.

பேருந்தில் செல்லும்பொழுது அதில் எழுதப்பட்டிருக்கும் திருக்குறளைப் படிக்க வேண்டும் என்று என் தந்தை எங்களுக்கு அறிவுரை கூறுவார்.

ஒரு முறை பேருந்தில் செல்லும்பொழுது, என் தம்பி சாப்பாட்டுக் கூடையைப் பேருந்திலேயே விட்டுவிட்டார். பேருந்தில் படித்திருந்த திருக்குறளை மனதில் கொண்டு அப்பேருந்தை அன்று மாலையே கண்டுபிடித்து, சாப்பாட்டுக் கூடையை வாங்கிவிட்டார். என் தம்பி சாப்பாட்டுக் கூடையைக் கண்டுபிடித்ததன் காரணம், என் தந்தை சொல்லிக்கொடுத்த அறிவுரைதான்.

என் தந்தை தபால் மூலம் பலருடன் தொடர்பு கொண்டிருந்தார். எனவே அவர் தினமும் தபால் நிலையத்திற்குச் செல்வார். அதன்படி அவரது இறுதி வாழ்க்கையும் தபால் நிலையத்திலேயே முடிந்துவிட்டது.

*சோமலெயின் புதல்வியார்

## 17. சோமலெயின் கடிதங்கள்

### சோமலெ சோமசுந்தரம்*

என் தந்தையாருடன் கடிதத் தொடர்பு கொண்டவர்கள் அனைவரும் அவர்கள் கடிதங்கள் தந்தி போன்றவை என்பார்கள். பதில் விரைவாக வரும், சுருக்கமாக இருக்கும்.

நான் கோவையிலும், அமெரிக்காவிலும் பயின்ற காலத்தில் (1982-86) எனக்குக் குறைந்தது வாரத்திற்கு இருமுறை அவர்களிடமிருந்து கடிதங்கள் வரும். பொதுவாக இவை நீண்ட கடிதங்கள், குடும்பத்தைப் பற்றி மட்டுமல்லாமல், பொதுவாழ்வு, உலக நடப்புக்கள், தமிழகத்தின் நிலை, உலக அரங்கில் இந்தியா, நான் முன்னேறுவதற்கான வழிமுறைகள் இப்படிப் பல அரிய கருத்துக்கள்! சுருக்கமாக, இவை நேருஜி இந்திரா காந்திக்கு எழுதிய கடிதங்கள் போன்றவை.

என் தந்தையாரின் கருத்துக்கள் அனைவருக்கும் பயன்படும் என்பதால் சிலவற்றை இங்குத் தொகுத்துள்ளேன்:

- உனக்கென்ற ஒரு நற்பெயரை மற்றவர்களிடம் உருவாக்கிக் கொள்வது கடினம், உருவாக்கிய பிறகு அதைப் பாதுகாப்பது இன்னும் கடினம்.
- கடின உழைப்பு, நேர்மை, அறிவுடைமை மூலம் வாழ்வில் உயர்வதுதான் முக்கியம்.
- செல்வத்தை விடக் காலம் முக்கியமானது.
- பிறரிடம் இருந்து நீ எதிர்பார்ப்பதையும், உன் தேவைகளையும் குறைத்துக்கொள்.
- மற்றவர்கள் சற்றும் எதிர்பார்க்காத நேரத்தில் சரியான முறைகள் மூலம் உன் பெருந்தன்மையைக் காண்பிக்க வேண்டும்.
- உனக்கு உதவிசெய்தவர்களிடம் நன்றி உணர்வோடு நடந்துகொள். நன்றி உணர்வு இல்லாதவர்களைப் பரந்த உள்ளத்தோடு மறந்துவிடு.

*சோமலெயின் புதல்வர்

- உபயோகமில்லாத நட்புக்களைத் தவிர்த்துவிடு.
- பேசுவதற்கும், அமைதியாக இருப்பதற்கும்,அவற்றிற்கான சரியான நேரங்களை எடுத்துக்கொள். பேசவேண்டிய போது அமைதியாகவும், அமைதியாக இருக்கவேண்டிய போது பேசியும் விடாதே.
- கடின உழைப்பிற்காக நேரத்தைச் சேமித்துக்கொள்.
- சிறு விஷயங்களுக்குக் கூட முக்கியத்துவம் கொடு.
- சோகமான சூழ்நிலைகளில் உன் நடத்தை மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்க வேண்டும்.
- கண்ணீர் விடுவதாலும், உணர்ச்சிவசப்படுவதாலும், மென்மையாக இருப்பதாலும் எவற்றையும் சாதிக்கப் போவதில்லை.
- அமைதியே கோபத்தைக் காண்பிக்கச் சிறந்த வழி.

தம் கடிதத்தில் உள்ள செய்திகளெல்லாம், பண்டிதமணி, ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார், சர்தார் வேதரத்தினம், ஏ.வி.எம். போன்ற பலருடைய வாழ்க்கை வரலாற்றை எழுதும் போது அறிந்து கொண்ட கருத்துக்கள் என்றும், பல பெரியவர் களுடன் பழகியதாலும், அவர்கள் வாழ்வைப் படித்ததாலும் கிடைத்த அனுபவம் இவை என்றும் எழுதுவார்கள்.

என் தந்தையாரின் கடிதங்கள் மிக அரிய பொக்கிஷங்கள், எனக்கு அவர்கள் விட்டுச் சென்ற மிகப் பெரிய செல்வம், இன்றும் படித்துப் பயன் பெறுகிறேன்.

அவர்கள் சென்னை அண்ணாசாலை அஞ்சலகத்தில் இறந்தபோது கூட எனக்குக் கடிதம் அனுப்பியதுதான் அவர்கள் செய்த கடைசிச்செயல். சோமலெ இறந்து பல வருடங்களாகிவிட்டாலும் இன்றும்கூட தபால்காரர் வரும் போது அவர்களிடமிருந்து கடிதம் வரவில்லையே என்ற ஏக்கம் - வருத்தம் - என்னுள் எழுவதுண்டு.

## 3

# பயண இலக்கியப் பிறிவு



## 18. சோமலெயின் உலகச் சுற்றுப் பயணம்

*உலகத்தில் எதிர்பாராத நிகழ்ச்சிகள் எவ்வளவோ நடைபெறுகின்றன. அவற்றுள் ஒன்று நான் வெளிநாடு களுக்குச் சென்றது. நான் தெய்வ பக்தியுள்ளவன். அறிந்தோ அறியாமலோ ஒரு பாடலை மனனம் செய்து கொண்டேன். அது இறைவனைப் பற்றியது. அந்தப் பாடல் வருமாறு:*

"உண்டதே உண்டும் உடுத்ததே உடுத்தும்
உரைத்ததே அடுத்தடுத்து உரைத்தும்
கண்டதே கண்டும் கேட்டதே கேட்டும்
கழிந்தன கடவு நாளெல்லாம்
வெண் தாமரை மேல் வீற்றிருக்கும்
விளநீர் வெண்காடவ உய்யுமாறு அருளே."

*இந்தப் பாட்டை இடையிடையே ஓதியதன் பயன் - காணாததை எல்லாம் காணுகிற ஒரு வாய்ப்பும், முன்னர்க் கேட்காத சிறந்த செய்திகளை எல்லாம் கேட்டறியும் பேறும், புதுப்புது வகையான உணவு வகைகளை உட்கொள்ளுகின்ற சூழ்நிலையும் ஏற்பட்டன. அதுதான் என்னுடைய உலகச் சுற்றுப் பயணம்.*

*- 'சோமலெ', பிரயாண இலக்கியம், ப.6.*

## 19. 'உலகத்தைச் சுற்றிப் பார்!'

வெளிநாடுகளுக்குப் புறப்படுவதற்குப் 'பாஸ்போர்ட்' என்னும் அடையாளச் சீட்டை நமது அரசியலாரிடமிருந்து வாங்கிக் கொள்ள வேண்டும். பிறகு, வெளிநாட்டு அரசியலாரிடமிருந்து 'விசா' என்னும் இசைவைப் பெற வேண்டும். வெளிநாட்டில் செலவு செய்ய, நம்மிடமுள்ள இந்திய நாணயத்தை அந்த நாடுகளில் செலாவணியாகும் நாணயமாக மாற்ற வேண்டும். இவ்வாறு மாற்றுவதற்கு ரிசர்வு பேங்கு ஆப் இந்தியாவிலுள்ள வெளிநாட்டு நாணயக் கட்டுப்பாட்டு அலுவலரின் ஆணை தேவைப்படும். தொத்துநோய்களைத் தடுப்பதற்கான ஊசி போட்டுக் கொண்டதற்குரிய சான்றிதழ்களைப் பெரிய மருத்துவர்களிடமிருந்து பெற வேண்டும். இவ்வளவு சடங்கும் செய்தால் போதுமா? கூலி வேலை செய்வதற்காக நாம் வெளிநாட்டுக்குச் செல்லவில்லை என்பதற்குரிய ஆதாரத்தை 'வெளிநாடு செல்லுவோரின் பாதுகாப்பாளர்' அலுவலகத்திலிருந்தும், அரசியலாருக்கு நாம் செலுத்த வேண்டிய வருமான வரிப் பாக்கிகளைச் செலுத்தி விட்டதற்குரிய விடுதலைத் தாளை வருமான வரி அலுவலரிடமிருந்தும் வாங்கிக் கொள்ள வேண்டும்.

அரை வீசை நிறுவையுள்ள மேலே கண்ட தாள்களைப் பெற ஆறு மாதம் ஆகும்! ஆம், உண்மையாகவே, சில சமயம் கூடுதலாகவே ஆகலாம். எந்தத் துறையிலும் அனுபவம் நிறைந்தவர்களுக்குத்தான் அதிலுள்ள இன்னல்கள் புலனாகும். 'வீட்டைக் கட்டிப் பார் - கலியாணத்தைப் பண்ணிப் பார்!' என்ற சொற்றொடர்களோடு 'உலகத்தைச் சுற்றிப் பார்' என்றும் சேர்த்துக் கொள்வது நலம்.

இன்னும், சுங்கச் சோதனையால் ஏற்படும் தொல்லைகளை யான் இங்கே விரிவாகக் கூற வேண்டுவதில்லை.

- *'சோமலெ', பிரயாணம் ஒரு கலை, பக். 10-11.*

## 20. பிரயாணம் என்பது என்ன?

*பிரயாணம் என்பது என்ன? வாழ்க்கையில் நமது அன்றாட வேலையிலிருந்து விடுதலை பெறவும் மன மகிழ்ச்சியடைய உதவவும் அமைதி நிறைந்த இடங்களுக்கும், கண்டு இன்புறத்தக்க காட்சிகளுள்ள பகுதிகளுக்கும் சென்று வருவதே பிரயாணம். இவ்வாறு செல்லுவதால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. இதனாலேயே பள்ளிக்கூடத்தில் பயிலும் போது சுற்றுலாக்களில் மாணவ மாணவிகள் அழைத்துச் செல்லப்படுகின்றனர். பழங்காலத்தில் யாத்திரை செய்யும் பழக்கம் இருந்து வந்தது. பிறகு, நம் மக்கள் திரை கடலோடினர் திரவியம் தேட. இக்காலத்தில் கல்வி கற்கவும், தாம் எழுத இருக்கும் அரிய நூலுக்கு ஆதாரமான செய்திகளை நேரில் தெரிந்து சேர்க்கவும் பலர் பயணம் செய்து வருகின்றனர். அரசியல் அலுவலாகவும் கலை வளர்ச்சி கருதியும் வெளி இடங்களுக்குச் செல்லுவோர் தொகையும் பெருகி வருகிறது. எந்த வேலையாக யார் நெடுந்தொலைவு சென்றாலும், அங்குப் பார்க்கத்தக்க இடங்களையும் பார்த்துவிட்டு வருவது வழக்கம். பொழுதுபோக்குக்காகவே பிரயாணம் செய்பவர்களும் இருக்கிறார்கள், பல நூறாயிரம் பேர்.*

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், ப. 147.*

## 21. 'கற்றது கைம்மண் அளவு, கல்லாதது உலகளவு!'

*பிரயாணம் செய்யும்போது, 'கற்றது கைம்மண் அளவு, கல்லாதது உலகளவு' என்ற பழம்பாடலின் ஆழமான கருத்தைத் தெளிவாக உணரலாம். பல மக்களுடைய உடைகளிலுள்ள வேறுபாட்டைக் காணலாம். பழக்க வழக்கங்களில் இருக்கும் மாறுதல் புலனாகும். மொழிகளின் வேடிக்கையான அமைப்புக்களைத் தெரிந்து கொள்ளலாம். பிற நாட்டு நிகழ்ச்சிகளையும் அறிந்து, அவற்றை நம் நாட்டுடன் ஒப்பிடலாம். 'கண்டதே கண்டும், கேட்டதே கேட்டும், உண்டதே உண்டும், அடுத்தடுத்து உரைத்ததே உரைத்தும்' நாட்களைப் போக்கும் நிகழ்ச்சி முறை மாறும்.. பிற நாடுகளின் முன்னேற்றத்தைக் காணும்போது, அவற்றின் வழிவகைகளை ஆராய வேண்டுமென்ற ஆர்வம் தோன்றும். நம் நாடும் சிறந்து விளங்க வேண்டுமென்ற ஆசை ஏற்படும். கந்தைத் துணியும், பரட்டைத் தலையும், ஒட்டிய வயிறும், உலர்ந்த தொண்டையும் நீங்கி, தொழில் வளர்ச்சி பெருக வேண்டுமென்று நினைப்போம். மனம் ஆக்க வழியில் செல்லும்.*

*- 'சோமலெ', பிரயாணம் ஒரு கலை, ப. 12.*

## 22. 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்!'

*பிரயாணம் செய்வது ஒரு கலை... பிரயாணம் செய்யும்போது பல நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். மற்றவர்களின் நடை உடை பாவனைகளை நன்றாக ஆராய வேண்டும். சுவையான கதைகளைச் சொல்லும்படி அந்த ஊர்க்காரர்களைத் தூண்ட வேண்டும். முதலில், நாமே பேச்சுக் கொடுக்க வேண்டும். அன்பு வலையை வீசி, அவர்களை அந்த வலையில் சிக்க வைக்க வேண்டும். நம்மை நாமே அறிமுகம் செய்து கொள்ள வேண்டும். இவ்வாறு செய்தால், யாருடனும் இரண்டறக் கலந்து விட இயலும். 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்பதை வாழ்க்கையில் உணரலாம்.*

- *'சோமலெ', பிரயாணம் ஒரு கலை, ப. 14.*

## 23. 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்!'

*பயணத்தால் விளையும் நலன்கள் எத்தனையோ உள்ளன; மனத்திற்கு உற்சாகம், உள்ளத்தை ஈர்க்கும் காட்சிகள், சிந்தனையைத் தூண்டும் கல்வியும் கேள்வியும், சிறந்த பழக்க வழக்க ஒழுக்கங்களை அறிந்து கொள்ளும் வாய்ப்பு, புதிய நண்பர்களுடன் பழகும் சூழ்நிலை. முகத்துக்கு முகம் கண்ணாடி. வேறுபட்ட மக்கள் ஒருவரை ஒருவர் சந்திப்பதால் உலகில் ஒற்றுமை நிலவும். நல்லுறவு வளரும். எனவே, 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும், கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர்!"*

- *'சோமலெ', பிரயாணம் ஒரு கலை, ப. 16.*

## 24. பிரயாண நூல்கள் எழுத விரும்புவோர்க்கு ஒரு குறிப்பு

*பிரயாண நூல்கள் எழுத விரும்புவோர் தங்கள் நாட்டைப் பற்றிய வரையில் ஒரு அறிவுக் களஞ்சியமாகத் திகழ வேண்டும். பல துறைகளில் பரவலான செய்திகளைத் தெரிந்திருக்க வேண்டும். இதனால் இப்பொழுது அமெரிக்கா வில் "சீ அமெரிக்கா பர்ஸ்ட்" (See America First) என்று ஒரு இயக்கம் தோன்றியிருக்கிறது. அந்த இயக்கத்தின் கருத்து என்னவென்றால் வெளிநாடுகளுக்குச் செல்லுவதற்கு முன்னர் ஒவ்வொருவரும் தங்கள் நாட்டைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதுதான்.*

*- 'சோமலெ', பிரயாண இலக்கியம், பக். 9-10.*

## 25. விபத்துகள் குறைய...

*வாகனங்களை மெல்ல ஓட்டினால் விபத்துகள் குறைவாக ஏற்படும். இதற்காக ஹாலந்தில் டிரைவர் இருக்கும் இடத்துக்கு முன்னால், அவருடைய மனைவி மக்களின் படம் மாட்டப்பெற்று, அப்படத்தின் கீழ் "எங்களை நினைத்துக் கொள், கவனமாக ஓட்டு" என்று எழுதப்பட் டிருக்குமாம். மிகுதியான வாகனங்களுள்ள ஆஸ்திரேலியாவில் இந்த முறையைப் பின்பற்றலாமென்று, அங்கே குடியேறியுள்ள என்னுடைய டச்சு நண்பர் ஒருவர் என்னிடம் கூறினார்.*

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், ப. 18.*

## 26. ஆஸ்திரேலிய மாம்பழத்தின் அருமை

ஒரு நாள் இயந்திர மரக்கலங்களில் (Motor and Steam Boats) இரண்டு மணி நேரம் அலைந்து திரிந்துவிட்டுச் சிட்னித் துறைமுகத்தில், உலகப் புகழ் பெற்ற 'சர்குலர் குவே' (Circular Qyay) என்ற இடத்தில் நான் களைப்புடன் வந்து இறங்கினேன். ஒரு கடையில் இருந்த மாம்பழம் என் கண்ணில் படவே, 8 பென்ஸ் (ஆறு அணா) கொடுத்து வாங்கி, அந்த மாம் பழத்தைச் சிறு துண்டுகளாக அறுத்துத் தரும்படி கடைக் காரனைக் கேட்டேன்.

"ஏ அசடே! (அசடு [Blobe] என்பது ஆஸ்திரேலியாவில் ஓர் அன்புச் சொல்) உள்ளே கொட்டை இருக்கிறது. எப்படி அப்பா அறுக்க முடியும்? முன்பின் மாம்பழம் சாப்பிட்டிருந் தால்தானே உனக்குத் தெரியும்! சரி, கடித்துச் சாப்பிடு" என்று கடைக்காரன் கூறினான். மாம்பழத்தை நானே அறுத்துக் காட்டினேன். இருபது ஆண்டுகளுக்கு முன் ஆகாய விமானத்தை நம் கிராம மக்கள் பார்த்த அதே ஆச்சரியக் கண்களோடு என் செயலைக் கண்டு என்னைச் சுற்றிலும் கூடிவிட்டனர் ஐம்பது ஆஸ்திரேலியர். மூத்தோர் வாக்கும் முதுநெல்லிக் கனியும் போல, ஆஸ்திரேலிய மாம்பழமும் முன் கசக்கும் பின் இனிக்கும் என்பதை அன்று உணர்ந்தேன்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், பக். 23-24.*

## 27. உயிரினங்களின் மீது பற்று

*விவசாயத்தில் கவனம் செலுத்துவதாலும் கால்நடைகளோடு பழகுவதாலும் ஆஸ்திரேலியர் மனிதத்தன்மை நிரம்பியவராயிருக்கின்றனர். 400 வகை உயிரினங்கள் தம் நாட்டில் இருப்பதைப் பற்றி அவர்கள் பெருமை பாராட்டுகிறார்கள். பல நிறக் கிளிகளும், கூக்காபாரா என்னும் சிரிக்கும் கழுதையும், குரலை எதிரொலி செய்யும் லயர் என்னும் பறவையும் ஆஸ்திரேலியாவில் உண்டு. நடு ஆஸ்ரேலியாவில் போக்குவரவுக்குக் குதிரைகள் மிகவும் பயன்படுகின்றன. ஆடுமாடுகள் அந்த நாட்டின் பெருஞ் செல்வமாயிருப்பதைப் பிறிதோரிடத்தில் விளக்கிக் கூறுவோம். உயிரினங்களின் படங்களைத் தபால் ஸ்டாம்புகளில் ஆசிகள் அச்சிடுகின்றனர். முக்கியமாக, நாய்கள் மீது ஆஸ்திரேலியருக்குத் தனிப்பிரியம் உண்டு. இரண்டு மணி நேரம் நாய் எசமானைப் பிரிந்து திரும்பி வராவிட்டால், அதன் படத்தைப் பிற்பகல் பத்திரிகையில் பிரசுரித்து விடுவர்! நாய் திரும்பி வந்து விட்டால், அடுத்த பதிப்பில் அதையும் விளம்பரம் செய்து விடுவார்கள்!*

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், பக். 27-28.*

## 28. 'இன்று குடைகள் மட்டுந்தான் திறந்திருக்கின்றன!'

*மெல்பர்ன் ஆஸ்திரேலியாவின் இரண்டாவது பெரிய நகரம்; திட்ட மிட்டுக் கட்டப்பட்ட நகரம். பொறியியற் கலை வல்லுநரின் கனவு நனவானதை இங்கே காணலாம். இங்குள்ள பெரிய சாலைகள் 99 அடி அகலமுள்ளவை. குறுக்கு வீதிகள் 33 அடி அகலம் இருக்கின்றன. இவை ஒடுங்கிய வீதிகள் என்பதைக் குறிப்பிடுவதற்காக இச்சாலை களின் பெயருக்கு முன்னால் 'சிறிய' என்ற அடைமொழி சேர்க்கப்படுகிறது.*

*மெல்பர்ன் நகரில் கிழக்கு மேற்கில் செல்லும் பெரிய சாலைகளும், தெற்கு வடக்கில் செல்லும் பெரிய சாலைகளும் சரியாக ஒவ்வொரு பர்லாங்குத் தொலைவிலும் ஒன்றை யொன்று நேராக வெட்டுவது நகர அமைப்பின் ஒரு சிறப்பு; மற்றொரு சிறப்பு அங்கு அடிக்கடி மழை பெய்வதாகும். எனவே, சாலைகளில் தூசு படிவதில்லை. ஏதாவது ஒரு விடுமுறை நாளில், 'இன்று எங்கேயாவது கடைகள் திறந்திருக்கின்றனவா??' என்று கேட்டால், 'இன்று குடைகள் மட்டுந்தான் திறந்திருக்கின்றன' என்ற மறுமொழியே கிடைக்கும்.*

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், பக். 39-40.*

## 29. 'ஒரு வேலையும் செய்யாமல் சம்பளம் பெறும் ஆஸ்திரேலியத் தொழிலாளர்'

*ஆஸ்திரேலியத் தொழிலாளருக்கு விடுமுறை நாட்கள் மிகுதியாக உண்டு. இதைப் பற்றி ஒரு வேடிக்கைக் குறிப்பு வழங்குகிறது. அது பின்வருமாறு: "ஓர் ஆண்டுக்கு 365 நாட்கள் உண்டு. நாளொன்றுக்கு எட்டு மணி நேரம், அதாவது மூன்றில் ஒரு பகுதியே தொழிலாளர் வேலை செய்கின்றனர்; இது ஓராண்டில் 122 நாட்கள் மட்டும் வேலை செய்வதற்குச் சமமாகும். சனி, ஞாயிறு விடுமுறை நாட்கள் - ஓராண்டில் மொத்தம் 104 நாட்களும் - கிறிஸ்துமஸ், புத்தாண்டு விழா, சுதந்திர தினம், பேங்கு விடுமுறை நாட்கள் ஆகியவைகளில் 5 நாட்களும் நீங்கலாக, 13 நாட்களே தொழிலாளர்கள் வேலை செய்கின்றனர். இதற்கு எதிராக ஒவ்வொரு தொழிலாளிக்கும் சம்பளத்துடன் ஓராண்டுக்கு 14 நாட்கள் ஓய்வு கிடைப்பதால் தொழிலாளர் ஒரு வேலையும் செய்யாமல் சம்பளம் பெறுகின்றனர்!"*

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், ப. 86.*

## 30. ஆஸ்திரேலியர்களின் மனப்பான்மை

*ஆஸ்திரேலியர் நல்ல உழைப்பாளிகள்; சரியாக வேலை செய்து பிழைக்க வேண்டுமென்ற அவர்களது மனப்பான்மையைக் கீழ்க்காணும் வழக்கால் அறியலாம்:-*

"வேலை நன்றாகச் செய்ய வேண்டும் – எதற்குத்
தெரியுமா? காசு வாங்கத் தான்.
காசு நிறைய இருக்க வேண்டும் – எதற்குத்
தெரியுமா? உணவு வாங்கத் தான்.
உணவு நிறைய உண்ண வேண்டும் – எதற்குத்
தெரியுமா? பலத்துக்காகத் தான்.
பலமும் நன்றாக இருக்க வேண்டும் – எதற்குத்
தெரியுமா? வேலை செய்யத்தான்."

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், ப. 89.*

## 31. ஆஸ்திரேலியாவிலிருந்து நம் நாடு அறியக்கூடிய படிப்பினைகள்

ஆஸ்திரேலியாவிலிருந்து நம் நாடு அறியக் கூடிய படிப்பினைகள் சில உண்டு. அவற்றை இங்கே குறிப்பிட்டுக் காட்டுவோம்.

ஆஸ்திரேலிய நாட்டின் விரைவான வளர்ச்சிக்கு அடிப்படையான காரணம் அங்குள்ள அரசியல் கட்சி களிடையே நிலவும் கருத்து ஒற்றுமையேயாகும். நாட்டின் முக்கியத் தொழில்களை அரசியலார் உடைமையாக்குவதை எல்லா ஆஸ்திரேலியக் கட்சிகளும் ஒப்புக்கொண்டுள்ளன. பேங்குகளையும் எஃகுத் தொழிற்சாலைகளையும் அரசியலார் நடத்துவது பற்றி மட்டும் வேறுபட்ட கருத்துக்கள் இருக்கின்றன. பிரிட்டிஷ் பேரரசு நாடுகளிலிருந்து இறக்குமதி யாகும் பொருள்களுக்குக் குறைவான சுங்க வரி விதிப்பது (Imperial Preferance), வெள்ளை ஆஸ்திரேலியக் கொள்கை, கம்யூனிசத்தை எதிர்ப்பது, பிரிட்டனுடன் நெருங்கிய உறவு கொண்டிருப்பது ஆகியவற்றிலெல்லாம் ஆஸ்திரேலியக் கட்சிகள் ஒற்றுமையாயிருக்கின்றன. நம் நாடும் தக்க முன்னேற்றம் அடைவதற்குத் துணையாக, இந்தியா - பாகிஸ்தான் உறவு, சில அடிப்படைத் தொழில்களை அரசிய லார் நடத்துவது, மொழி வாரி இராச்சியங்கள் அமைப்பது, இராச்சியங்களுக்கு மிகுதியான உரிமைகள் வழங்குவது, பொருளாதார வளர்ச்சிக்குத் திட்டமிடுவது, மதச் சார் பில்லாத அரசு, நடு நிலைமையான வெளிநாட்டுக் கொள்கை ஆகியவை பற்றி எல்லாக் கட்சியினரும் ஏற்றுக்கொள்ளக் கூடிய அடிப்படைகள் வகுக்கப்பட வேண்டும்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், பக். 118-119.*

## 32. அமெரிக்கத் தொழிலாளியும் ரஷ்யத் தொழிலாளியும்

அமெரிக்க மோட்டார்த் தொழிற்சாலைகளுக்குத் தொழிலாளிகள் தம் இல்லங்களிலிருந்து சொந்த மோட்டார்க் கார்களிலாவது அல்லது சொந்த மோட்டார் சைக்கிள் களிலாவது வருவது வழக்கம். இதையொட்டி வழங்கும் கதை ஒன்றுண்டு. அது வருமாறு:

ஓர் அமெரிக்கத் தொழிலாளி ரஷ்யாவுக்குச் சென்றான். அங்கிருந்த ரஷ்யத் தொழிலாளி தொழிற்சாலை ஒன்றைக் காட்டி, "இது தொழிலாளரைச் சேர்ந்தது. இந் நாட்டில் எல்லாம் பொதுஉடைமை" என்று பெருமையாகச் சொன்னான். 'அங்கே நிற்கும் ஒரு சில கார்கள் யாருடையன' என்ற வினாவுக்கு, அவை தொழிற்சாலையை மேற்பார்க்கும் ஒரு சிலரைச் சேர்ந்தவை என ரஷ்யத் தொழிலாளி விடை பகர்ந்தான். சில வாரங்களுக்குப் பின்னர், அந்த ரஷ்யத் தொழிலாளி அமெரிக்கத் தொழிலாளியின் விருந்தினனாக வந்து, டெட்ராய்ட் நகரிலுள்ள ஒரு தொழிற்சாலையைப் பார்வையிட்டான். "இந்தத் தொழிற்சாலை யாருடையது?" என்று ரஷ்யத் தொழிலாளி கேட்டான். "தொழிற் சாலை முதலாளிகளைச் சேர்ந்தது; ஆனால் தொழிற்சாலைக்கு வெளியே நிற்கும் பல்லாயிரக் கணக்கான கார்கள் தொழிலாளருக்குச் சொந்தமானவை!" என்று அமெரிக்கத் தொழிலாளி கூறவே, ரஷ்யத் தொழிலாளி வாயடங்கிப் போனான்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், அமெரிக்காவைப் பார்!, ப. 34.*

## 33. இக்காலத்து மின்சார வளர்ச்சி

"அரிக்கன் விளக்கு அல்லது பெட்ரோமாக்ஸ் விளக்கைப் பார்த்த மாணவர் கை உயர்த்தலாம்" என்று அமெரிக்காவின் உயர்நிலைப் பள்ளிக்கூட வகுப்பு ஒன்றில் ஓர் ஆசிரியர் கேட்டாராம். ஆனால் மாணவர் ஒருவரேனும் கையை உயர்த்தவில்லையாம். இதற்குக் காரணம் மின்சார விளக்குத் தவிர வேறு வாயிலாக அவர்கள் வெளிச்சத்தை அறியாததே. இதிலிருந்து, இக்காலத்திற் சில நாடுகளில் மின்சார வளர்ச்சி எவ்வளவு மிகுந்திருக்கின்றது என்பது தெரியவரும்.

*- 'சோமலெ', நான் கண்ட விழாக்கள், ப. 83.*

## 34. பழம்பெருமையைப் பேணும் அமெரிக்கா

பழமைப் பெருமையை உணர்த்தும் இடங்களைப் பேண அமெரிக்காவில் ஆயிரக்கணக்கான கோடிகளை அள்ளித் தெளிக்கின்றனர். 1715-இல் புகழுடன் நிலவில (வர்ஜினியாவின் தலைநகரான) கலோனியல் வில்லியம்ஸ்பர்க் என்னும் நகரை அன்றைய நிலையில் இருந்தவாறு - அணுவளவும் மாறாமல் - அமைக்க 25 ஆண்டு வேலை நடைபெற்றது; 720 புதிய கட்டிடங்கள் இடித்துப் பழைய கட்டிடங்களைப் போலக் கட்டப்பட்டன; பழங்காலத்து மரங்கள் நடப்பட்டன; அக்காலத்துக் கோச்சு வண்டிகளும் செய்யப்பட்டன. ஆனால் கலை வளம் நிறைந்த வேலூரில் பழமைச் சின்னமான கோயில் தேடுவாரின்றியும், கோட்டை அரசாங்க அலுவலகமாகவும் இருக்கிறது. நாம் இந்தியாவில் இருக்கிறோம்; அமெரிக்காவில் இல்லை.

*- 'சோமலெ', வட ஆர்க்காடு மாவட்டம், ப. 153.*

## 35. 'நாயை விரட்ட ஆங்கிலம்... மனைவியோடு கொஞ்சி விளையாட பிரெஞ்சு!'

பிரெஞ்சு உலகிற் சிறந்த மொழிகளுள் ஒன்று. அது தெள்ளத் தெளிந்தது. ஊற்றுநீர் போன்ற ஒரு மொழி. 1918 வரை ஐரோப்பாவில் அரண்மனை மொழியாகவும் சர்வ தேச அரசியல் உறவுக்கு உதவும் மொழியாகவும் விளங்கி வந்தது.

ஒவ்வொரு மொழிக்கும் சிறப்பியல்பு ஒன்று உண்டு. ஆங்கிலத்தின் தனித்தன்மை, காலத்துக்கு ஏற்றபடி அமைத்துக் கொள்வது. தமிழின் பெருமை, தொன்மை கலந்த கன்னித்தன்மை. பிரெஞ்சின் இயல்பு, அதன் தெளிவு.

'பிரெஞ்சு தெளிவு' ('la Carte francaise') என்னும் பழமொழி யே இதற்குச் சான்று. ஐயப்பாடின்மை, பொருத்தமான சொற்கள் ஆகிய பண்புகள் இந்த மொழிக்கு உண்டு. நுண்ணிய கருத்துக்களை வெளியிடும் ஆற்றல் பெற்றது பிரெஞ்சு மொழி. எனவே உலக நாடுகள் தங்களுக்குள் செய்து கொள்ளும் உடன்பாடுகளைப் பிரெஞ்சு மொழியிலேயே எழுதிக் கொள்ளுகின்றன. ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய இரு மொழிகள் மட்டுமே உலக நீதிமன்றத்தில் பயன்படுத்தப் படுகின்றன.

பிரஞ்சு இனிமையான மொழி. "உன்னுடைய நாயை விரட்ட, ஆங்கிலத்தில் பேசு. மனைவியோடு கொஞ்சி விளையாட, பிரெஞ்சில் பேசு" என்பது ஒரு பழமொழி.

*- சோமலெ, உலக நாடுகள், ப. 30.*

## 36. பங்கீட்டுக் கடைக்குச் சர்க்கரை கொடுத்த பிரிட்டிஷ் பெண்கள்

*போர்க் காலத்தில், ஒரு முறை சர்க்கரைக் கப்பல்கள் காலந்தாழ்த்து வந்தன; பங்கீட்டுக்குப் போதிய சர்க்கரை கையிருப்பில்லாது போகவே, மிகுதியாக வைத்திருப்பவர்கள் எஞ்சுவதைப் பங்கீட்டுக் கடையிற் கொடுத்துச் சீட்டுப் பெற்றச் சில வாரங்களில், திருப்பிப் பெற்றுக் கொள்ளலா மென அலுவலாளர் அறிவித்தனர். உடனே, பல்லாயிரக் கணக்கான பெண்கள், அதிகப்படியாயிருந்த சர்க்கரையைக் கடைகளில் கொடுக்க, வரிசை முறையில், கட்டுப்பாடாகக் காத்திருந்தனர். இது பிரிட்டன் தவிர வேறு எந்த நாட்டில் நிகழும்? "தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தன்னாட்டிற்கு இன்னல் விளைக்கும் வினை" என்ற நெறியைப் பின்பற்றும் இவர்கள் குணம் மெச்சத்தக்கது.*

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், என் பிரயாண நினைவுகள், ப. 64.*

## 37. 'நம்பர் 5, இங்கே வா...!'

*'சிறிய குடும்பமே வாழ்க்கையை இன்பமயமாக்கும்' என்ற அடிப்படை இரகசியத்தை சுவிஸ் மக்கள் உணர்ந்திருக்கின்றனர். ஒரு சுவிஸ் நண்பர் மற்றொருவரைப் பற்றிக் குறிப்பிடும் போது, "அவர் குடும்பம் பெரியது" என்றார். "எத்தனை குழந்தைகள்?" என்று யான் ஆவலோடு கேட்க, "மூன்று" என்று அவர் குறிப்பிட்டார். "இது பெரிய குடும்பமா?" என்று யான் மேலும் கேட்ட போது, இரண்டு குழந்தைகள் இருப்பதே சுவிட்சர்லாந்தில் அரிது என்று அந்த அன்பர் பதிலளித்தார்.*

*சீனரின் பெரிய பிரச்சினை எப்படித் தம் குழந்தைகளுக்கு உணவு அளிப்பது என்பதே. ஒரு டஜன் குழந்தைகளிருப்பது அவர்கள் குடும்பங்களில் சாதாரணக் காட்சி. பெற்றோர்கள் குழந்தைளை எண் வரிசைப்படி அழைப்பதும் உண்டு.*

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், என் பிரயாண நினைவுகள், பக். 47 & 117.*

## 38. ஒரு வித்தியாசமான பயண அனுபவம்

*சுவிட்சர்லாந்தில் 'லூசர்ன்' (Lucerne) என்ற அழகிய நகரில் 'அமெரிக்கன் எக்ஸ்பிரஸ்' அலுவலகத்தார் சிறப்பாக ஏற்பாடு செய்த மலைக்காட்சிப் பிரயாணம் ஒன்றில் அவர்களுடைய 'கோச்' என்னும் காரில் 25 பிரயாணிகளுடன் நானும் ஒருவனாகச் சென்றேன்; எனது மழைக் 'கோட்'டை யும் உடன் எடுத்துச் சென்றிருந்தேன். ஆனால் அன்று மழை பெய்யாததால், அந்தக் 'கோட்'டைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. பல இடங்களில் இறங்கி, ஆங்காங்குக் காட்சிகளைப் பார்த்துவிட்டு மீண்டும் 'கோச்'சில் ஏறிக் கொண்டேன். பிரயாணம் முடிந்ததும், நான் என் மழைக் 'கோட்'டைக் காரிலேயே வைத்து விட்டு, மற்றப் பிரயாணிகளிடமிருந்து விடைபெற்றுக் கொண்டேன். இரண்டு மணி நேரம் லூசர்ன் கடை வீதிகளில் சுற்றித் திரிந்துவிட்டு, எனது ஹோட்டலுக்குச் சென்றேன். அங்கு 'அமெரிக்கன் எக்ஸ்பிரஸ்' ஊழியர் ஒருவர் என்னுடைய மழைக் 'கோட்'டுடன், எனக்காகக் காத்துக் கொண்டிருந் தார்! 'கோட்' இருந்த இடத்திலிருந்து அது என்னுடையது என்று முடிவு செய்து, பல ஹோட்டல்களை டெலிபோன் மூலம் விசாரித்து, நான் தங்கியிருந்த ஹோட்டலை அறிந்து கொண்டதாக அவர் சொன்னார். இது போன்ற நிகழ்ச்சிகள் அடிக்கடி நிகழ்கின்றன என்பதையும் எனது மழைக் 'கோட்'டின் விலை ரூ. 100 என்பதையும் இங்கே தெரிவிக்க விரும்புகிறேன்.*

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், அமெரிக்காவைப் பார்!, பக் 165-166.*

## 39. வெள்ளையரின் நல்ல பழக்க வழக்கங்கள்

தொழிற்சாலைத் திறப்பு விழாவுக்கு எனக்கு அழைப்பு வந்ததும் அந்த அழைப்போடு இணைக்கப்பட்டிருந்த ஓர் அமைப்புப் படம் எனக்கு வியப்பையும் மகிழ்ச்சியையும் தந்தது. "வெள்ளையனே வெளியே போ" என்று உரக்கக் கத்தக் கற்றுக்கொண்ட நாம், வெள்ளையருடைய நல்ல பழக்க வழக்கங்களைப் பின்பற்ற மறந்து விட்டோம். 'விசிட்டிங் கார்டு'களில் கூட தம் வீடு அல்லது அலுவலகம் இருக்கும்' இடத்தைப் படம் போட்டுக் காட்டுவது இங்கிலாந்திலும் வேறு சில நாடுகளிலும் உள்ள நல்ல பழக்கம். இந்த முறையையொட்டி அழைப்போடு அமைப்புப் படமும் இருந்ததால் உரிய இடத்தை அடைவது யாருக்கும் எளிதாக இருந்தது.

*- 'சோமலெ', நான் கண்ட விழாக்கள், ப. 37.*

## 40. குழந்தை வளர்க்கும் கலை

படிப்பு என்பது வீட்டில் தொடங்குகிறது. பள்ளிக் கூடத்தில் தான் படிப்புத் தொடங்குவதாயும் பள்ளிக் கூடத்தை விட்டு விலகிக் கொண்டதும் படிப்பு முடிந்து விடுவதாயும் நம்மில் பலர் தவறாக நினைத்துக் கொள்ளு கிறோம். வெளிநாடுகளில் குழந்தைகள் பிறந்தது முதலே அவர்களுக்கு நல்ல பழக்கங்களைப் பெரியோர்கள் சொல்லிக் கொடுக்கிறார்கள். அறிவை ஊட்டுகிறார்கள். 'ஓய்வு நேரமெல்லாம் படிக்க வேண்டும்' அதை வீணாக்கக் கூடாது. செய்வன திருந்தச் செய்ய வேண்டும்' என்பவற்றைச் செயல் முறையில் கற்பிக்கிறார்கள். வீட்டிற்கு விருந்தினர் ஒருவர் வந்தால் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்கு அவரை அறிமுகப்படுத்துவார்கள். "இவன்தான் எங்கள் மகன்... இந்த ஊர் உயர்நிலைப் பள்ளியில் முதல் படிவம் படிக்கிறான். இவனுக்கு இசையிலும் நாடகத்திலும் விருப்பம் மிகுதி" என்று குழந்தையைப் பற்றிப் பெருமையாகச் சொல்லுவார் கள். உடனே அந்த மாணவனுக்கும் தம்மைப் பற்றிப் பெற்றோர்கள் இன்னும் பெருமையாகப் பேசும் முறையில் தான் நடந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் ஏற்படும். நம் வீடுகளில் பிள்ளைகளை நாம் எப்படி அறிமுகப்படுத்து கிறோம்? பிள்ளைகளையே அறிமுகப்படுத்துவதில்லை. வந்தவர் "பையன் யார்?" என்று ஏதாவது கேட்டால் "இந்த தடிப்பயலையா கேட்கிறீர்கள்? எருமை மாடு மாதிரி, பள்ளிக் கூடத்திற்குப் போகமாட்டான். தண்டச்சோறு தின்னுட்டு ஊர் சுற்றுகிறான்" என்று சொல்லுவோம். இது நம் நாட்டில் குழந்தை வளர்க்கும் கலை.

*- 'சோமலெ' , பல்சுவைக் கட்டுரைகள், பக். 124 - 125.*

## 41. பிறரை இகழாத பெருந்தன்மை

"நான் சென்ற நாடுகளில், எக்காரணத்தாலாவது ஒருவனுக்கு உடலின் ஒரு பகுதி - கால் அல்லது கை அல்லது வேறு உறுப்புப் போய்விட்டால், அதற்காக அவரைப் பிறர் நேரிலோ மறைவிலோ இகழ்வதில்லை. அவர் ஊக்கமிழந்து விடும் படியாக அவரிடம் ஒருவரும் நடந்துகொள்ளு வதில்லை. அவருடைய இழந்து போன உடலுறுப்பைப் பற்றி ஒன்றும் பேசாமல், மற்றச் செய்திகளைப் பற்றியே அவரிடம் பேசுவார்கள். 'ஐயோ! உனக்குக் கை போய்விட்டதே!' என்று அவரிடம் அழுவதில்லை. போரில் ஒன்றுக்கு மேற்பட்ட உறுப்புக்களை இழந்த பல நூறாயிரம் பேர், எல்லா உறுப்புக்களுமுடையவர்கள் செய்யும் வேலைகள் அனைத்தையும் விஞ்ஞான உதவியால் மகிழ்ச்சியுடனும் திறமையுடனும் செய்வதை, ஜெர்மனியிலும் அமெரிக்கா விலும் இங்கிலாந்திலும் ஒவ்வொரு நாளும் கண்டேன்."

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், நான் கண்ட வெளிநாட்டுக் காட்சிகள், ப. 109.*

## 42. பார்வையிழந்தோரின் அறிவாற்றல்

"அரிது அரிது மானிடராகப் பிறத்தல் அரிது
மானிடராகப் பிறந்த காலையும் கூன் குருடு
செவிடு பேடு நீங்கிப் பிறத்தல் அரிது"

என்பது ஔவையார் பாடல். பார்வையிழந்த பலர் அறிவாற்றல்களிலே சிறந்து விளங்குவதைப் பல நாடுகளிலே காண்கிறோம். அதற்குக் காரணம் மற்றவர்களைப் போல் கல்வி கற்றுக் கொள்ளவும் வாழ்க்கையில் சிறப்படையவும் அவர்களுக்கு அந்த நாடுகளில் வாய்ப்பும் வசதியும் இருப்பது தான். நம் நாட்டில் இப்போது அது போன்ற முயற்சி ஓரளவு தொடங்கியிருக்கிறது. இதுவரை இந்த வசதிகள் இல்லாத காரணத்தால்தான் வெளிநாடுகளில் பார்வையிழந்தவர் கூட படித்துப் பயன் அடையும் ஒரு தொழிலைச் செய்து வரும் போது நம் நாட்டில் பிச்சைக்காரர்களாகவே இருந்து விட்டால் குருடர்களுக்குக் கூடுதலான வருவாய் கிடைக்கும் என்ற எண்ணம் இருந்து வந்தது.

குருடர்கள் தங்கள் விரல்களால் தொட்டு அதனால் ஏற்படும் உணர்ச்சியால் படிக்கக்கூடிய நூல்களுள்ளன. இந்த நூல்களுக்கு பிரைல் எழுத்து நூல்கள் என்று பெயர். அதற்கெனத் தனி அச்சகமும் இருக்கிறது.

இந்த முறையில் படித்தவர்கள் பலர் பேராசிரியர்களாக வும் புலவர்களாகவும் தொழில் அறிஞர்களாகவும் இருக்கின்ற னர்.

குருடர்களுக்கெனப் பள்ளிக்கூடங்கள் அமைப்பதில் இன்னும் ஒரு நன்மை இருக்கிறது. தம்முடைய ஊழ்வினைப் பயனை எண்ணித் தனிமையாக இருந்து அவர்கள் வருந்தாமல் தம்மைப் போன்ற மற்றவர்களோடு சேர்ந்து பழகி இன்னல்களை மறக்க இயல்கிறது.

- *'சோமலெ', செங்கற்பட்டு மாவட்டம், பக். 78-79.*

## 43. 'சுதந்திரம் ஒரு பேரின்பம்'

உலகெங்குமுள்ள அரசியலாரின் கட்டிடங்களில் இந்தியச் செக்ரடேரியட்டுக் கட்டிடமே மிகப் பெரியது என்று வேற்று நாட்டினரும் ஒப்புக்கொள்ளுகின்றனர். இதன் உயரம் 217அடி. உச்சியிலுள்ள வட்ட வடிவமான கூண்டு நல்ல தோற்றத்தைத் தருகிறது. ஆயிரம் அறைகளுக்கு மேல் இங்கே உள்ளன. கலை, போர், அமைதி, இசை பற்றிய நல்ல ஓவியங்களும் இங்கே எழுதப்பெற்றுள்ளன. வட பிளாக் வாயிலில் கீழ்க்காணும் அறிவுரையைக் கண்டேன். இது நாம் ஊன்றிக் கவனிக்கத்தக்கது.

"சுதந்திரம் என்பது ஒரு நாட்டு மக்களுக்குத் தானே வானத்திலிருந்து விழுந்து விடாது. மக்கள் தங்களைச் சுதந்திரத்திற்கு ஏற்றவர்களாக்கிக் கொள்ள வேண்டும். சுதந்திரம் ஒரு பேரின்பம். பாடுபட்டு அதைப் பெற்றால்தான், இன்பத்தை நுகரலாம்."*

*- சோமலெ. இலக்குமணச் செட்டியார், நமது தலைநகரம், பக். 15-16*

* "Liberty will not descend to a people; a people must raise themselves to liberty; it is a blessing that must be earned before it can be enjoyed."

## 44. 'நாள் குறித்தல்'

ஐரோப்பிய நாடுகளில் போலவே, அமெரிக்காவிலும் உயர்நிலைப் பள்ளி முடிவடையும் காலத்திலேயே இளைஞர்கள் காதல் வாழ்க்கையைத் தொடங்குவர். தனித்த இடங்களில் அவர்கள் ஒன்றாகப் பொழுதுபோக்குவர். இதை முன்கூட்டியே முடிவு செய்வர். இதற்கு 'நாள் குறித்தல்' (Dating) என்று பெயர். நான் ஒரு குடும்பத்துடன் தங்கியபோது, அந்தக் குடும்பத்து இளைஞன் முதல் நாள் இரவு அங்கே உறங்கவில்லையே என்று அவனுடைய பெற்றோர்களைக் கேட்டேன். அந்நாள் அவன் 'குறித்த நா'ளாக இருந்ததால், காதலியுடன் சென்றிருந்தான் என்று கூறினர். அதைப் பற்றிய விவரங்களையும் அவர்கள் எனக்குத் தெரிவித்தனர். அன்று இரவு மீண்டும் வெளியே செல்லுவான் என்றும் என்னை அழைத்துக் கொண்டு போவதாகவும் பெற்றோர்கள் கூறினர். இரவு 10 மணி இருக்கும். நாங்கள் அவர்களுடைய காரில் பயணமானோம். முன் வரிசையில் பெற்றோர்கள் இருவரும் இருந்தனர். பின் வரிசையில் நானும் என்னுடைய நண்பன் ஒருவனும் இருந்தோம். அங்கிருந்து ஒரு மைல் தொலைவில் ஒரு கடையின் அருகே அந்த இளைஞனும் அவன் காதலியும் காத்திருந்தனர். அவர்களை ஏற்றிக் கொண்டு காதலர்கள் குறிப்பிட்ட இடத்திற்குச் சென்றோம். செல்லும் வழியில் தந்தை மகனிடம் இவ்வாறு கூறினார்: "இந்தியாவிலிருந்து வந்திருக்கும் நம் நண்பருக்கு உட்கார வசதியாக இடம் கொடுங்கள், வேண்டுமானால் உன் காதலியை உன் மடியில் தூக்கி வைத்துக்கொள்."

- *'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், பக். 138-139.*

## 45. 'தலை வழுக்கையானால்...?'

"ஸ்காட்லாந்துக்கு நான் போனதில்லை. ஸ்காட்சுக்காரர் கணக்கில் வல்லுநர் என்றும், மிகச் சிக்கனமானவர் என்றும் கேள்விப்பட்டிருந்தேன். அந்த ஸ்காட்சுக்காரரைக் கண்டவுடன் பல ஆண்டுகளுக்கு முன் நான் படித்த பின்வரும் பத்திரிகைக் குறிப்பு என்நினைவுக்கு வந்தது. அதாவது:

'ஓர் ஆங்கிலேயருடைய தலை வழுக்கையாயிற்று; திரும்பவும் மயிர் வளரும்படி செய்ய அவர் பெரும்பொருள் செலவு செய்தார். ஒரு ஸ்காட்சுக்காரரின் தலை வழுக்கையாயிற்று; அவர் உடனே சீப்பை விற்றுவிட்டார்'!"

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், நான் கண்ட வெளிநாட்டுக் காட்சிகள், பக். 103-104.*

## 46. மகாத்மா காந்தியும் மதுரையும்

*இந்திய அரசியலில் மகாத்மா காந்தி கால்கொண்டது முதல் அவருக்கும் மதுரைக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. விரிவான ஆடைகளைக் களைந்து அடிகள் அரை நிர்வாணப் பக்கிரிக் கோலம் கொண்டது மதுரை மாநகரில்தான். மதுரை மாவட்டத்து மக்களின் ஏழ்மை அவர் மனத்தை அந்த அளவிற்கு உருக்கிற்று. இந்நிகழ்ச்சி 1921-ஆம் ஆண்டு செப்டம்பர் திங்கள் இறுதியில் காந்தியடிகள் கருமுத்து தியாகராசர் இல்லத்தில் தங்கியிருந்த போது நடைபெற்றது.*

"அந்நிய நாட்டுத் துணியை மக்கள் கொளுத்திவிட்டனர். ஆனால் அதற்குப் பதிலாகக் கதர்த்துணி வாங்கப் பணம் இல்லாமல் அவர்கள் தவிக்கிறார்கள். இனி அவர்கள் கோவணத் துணியுடன் மட்டும் வாழ்ந்து திருப்தி அடையட்டும். அவர்களுக்கு வழிகாட்டியாக நானே இன்று முதல் என்னுடைய வேட்டியையும் தொப்பியையும் உள்சட்டையையும் கூடக் கைவிட்டு விடுகிறேன். ஒரு சிறுதுணி மட்டுமே இனி என் ஆடையாக இருக்கும். தேவையான போது உடலைக் குளிரிலிருந்து பாதுகாத்துக் கொள்ள, ஒரு துண்டு உபயோகிப்பேன்" என்று காந்தியடிகள் மதுரையில்தான் அறிவித்தார்

*- சோமலெ, மதுரை மாவட்டம், பக். 176-177.*

## 47. மாவட்ட வரிசை நூல்கள் எழுத வேண்டும் என்ற எண்ணம்

வெளிநாடுகளைப் பற்றிய எந்தச் செய்தியையும் உடனே விவரமாக நாம் வேண்டுமாறு தெரிந்து கொள்ள இயலும்; குறிப்பிட்ட எப்பொருளைப் பற்றியும் எப்பகுதி யைப் பற்றியும் நூல்களை நூல்நிலையங்களில் காணலாம்; அவ்வாறு கிடைக்காவிடில் அந்தந்த நாடுகளின் தூதுவர் அலுவலகங்களுக்கோ, செய்தி நிறுவனங்களுக்கோ எழுதிப் பெறலாம்.

நம் நாட்டைப் பற்றி இத்தகு நூல்களை, சுதந்திரம் பெற்ற பிறகு இந்திய அரசாங்கத்தார் வெளியிட்டு வருகின்றனர். ஆனால் நமது மாநிலங்களைப் பற்றியும் மாவட்டங்களைப் பற்றியும் நூல்கள் வெளிவரவில்லை. மாவட்டங்களைப் பற்றி இதுவரை வெளிவந்திருப்பவை, வெள்ளைக்காரக் கலக்டர்கள் எழுதிவைத்த மானுவல், கெசட்டியர் என்பன மட்டுமே. இவை சிறந்த முறையில் எழுதப் பெற்றன; அரும்பொருட்களைத் தெரிவிக்கின்றன; ஆனால் இவை ஆங்கில மொழியிலேயே உள்ளன. மேலும், ஆங்கிலேயரால் எழுதப்பட்டமையால், நமக்குச் சாதாரணமாகத் தெரிந்த செய்திகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்திருக்கின்றன். ஆட்சியாளராயும் அயல்நாட்டினராக வும் இருந்ததால் அவர்கள் நம் நாட்டுச் சாதிகளைப் பற்றித் துணிந்து குறிப்பிட்டுள்ளனர்; இந்நூல்கள் யாவும் அரசாங்கக் கண்ணோட்டத்துடனும், 'ரெவினியு டிபார்ட்டுமெண்டு' அலுவலர்க்குப் பயன்படுமாறும் அமைந்துள்ளன.

ஆகையால் தமிழ்நாட்டிலுள்ள மாவட்டங்களைப் பற்றி, விரிவான நூல்கள் வெளிவர வேண்டும் என்ற எண்ணம் 1950-இல் எனக்கு ஏற்பட்டது.

*- 'சோமலெ', முன்னுரை, சேலம் மாவட்டம், ப. 5.*

# 4

## சான்றோர்களின் வாழ்வும் வாக்கும்



### 48. பேரறிஞர்களின் வரலாற்றில் காணப்படும் அரிய நிகழ்ச்சிகள்

"பேரறிஞர்களது வரலாற்றிற் காணப்படும் அரிய நிகழ்ச்சிகள் மக்களெல்லார்க்கும் நன்கு பயன்படும் என்னும் நம்பிக்கையுடன் யான் பழகிய அறிஞர்களின் சிறப்பியல்பு களைக் குறித்துக் கட்டுரை வாயிலாக வெளிப்படுத்துதல் எனது பொழுதுபோக்காகும். பண்டிதமணியவர்களது வாழ்க்கை வரலாறு விரித்தெழுதப் பெறுமானால் அது தமிழ் அன்பர்களுக்குப் பெரிதும் பயன்படுமென எண்ணினேன்...

பண்டிதமணியவர்களது வரலாற்றை யான் எழுத எண்ணியதுணர்ந்து கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள், பிறந்த நாள் முதலிய குறிப்புகளும் திருமணம் முதலிய பொது நிகழ்ச்சிகளுமாக மக்கள் எல்லார்க்குமுரிய சாதாரண வாழ்க்கைக் குறிப்புக்களை விரித்துரையாமல் பண்டிதமணியவர்களின் புத்தி நுட்பத்தையும் சிறந்த பண்புகளையும் பாட்டும் உரையும் வரையும் அவரது புலமை நலத்தையும் சுவை நிறைந்த சொல் வளத்தையும் தமிழ் வளர மேற்கொண்ட அரிய முயற்சிகளையும் படிப்போர் மனங் கொள்ளும்படி அவர்களது வாழ்க்கை வரலாற்றினை யெழுதுதல் வேண்டும் என எனக்கு அறிவுறுத்தினார்கள். இவ்வகையிலே இவ்வரலாற்றை எழுத ஓரளவு முயன்றிருக்கிறேன்."

*-'சோமலெ', முன்னுரை, பண்டிதமணி, p.v-vi.*

## 49. 'அவன் மாட்டை ஓட்டுகிறான்; நான் அவனை ஓட்டுகிறேன்!"

உடல் அமைப்பின் குறைவால், பண்டிதமணி அவர்கள் வாழ்வில் எத்தனையோ நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இவை அவரது வரலாற்றின் சுவையான பகுதிகள்...

சிறிது தொலைவிலுள்ள இடங்களுக்கும் பண்டிதமணி அவர்கள் மாட்டு வண்டியிலேயே செல்ல நேர்ந்தது. எனவே, அண்ணாமலை நகரிலிருந்தபோது, அவரிடம் ஓர் ஒற்றை மாட்டு வண்டி இருந்தது. அதில் அவர் ஏறிக் கொண்டு நாள்தோறும் மாலை நேரத்தில் உலாவி வரச் செல்வார்; ஒரு நாள் நண்பர் ஒருவரையும் வண்டியில் உடனழைத்துச் சென்றார். வண்டி போகும் போது, முன்பக்கமாக உட்கார்ந்து கொண்டு, 'இப்படிப் போ, அப்படிப் போ' என்று கூறி, வண்டிக்காரனுக்கு வழிகாட்டிக் கொண்டே சென்றார். உடன் வந்தவரோடு ஒரு சிறிதும் பேசவில்லை. அதனால், அந்த நண்பரின் மனம் புண்பட்டது. அப்போது பண்டிதமணி, "வண்டியில் பூட்டப்பெற்றிருக்கும் மாடு புதிது; வண்டிக் காரனும் புதிய ஆள். அவன் மாட்டை ஓட்டுகிறான்; நான் அவனை ஓட்டுகிறேன். எனவே, என் கருத்தனைத்தும் அப்பக்கமே திரும்பிவிட்டது" என்றார்.

*- 'சோமலெ', பண்டிதமணி, பக். 22-23.*

## 50. பண்டிதமணியைத் தாங்கிய மகா சன்னிதானம்

திருவாவடுதுறை ஆதீனத்தின் தலைவராக இருந்த அம்பலவாண தேசிகர் அவர்களும் பண்டிதமணி அவர்களும் இனிய நண்பர்களாக இருந்தனர். முதல் முறை அவர்களைக் காண நேர்ந்த போது ஆதீன வழக்கப்படி பண்டிதமணி அவர்கள் மகா சன்னிதானம் அவர்களுடைய பாதத்தில் விழுந்து வணங்கினார்கள். அப்போது, அவர்களுடைய கைப் பிரம்பு வழுக்கியதால், பண்டிதமணி கீழே விழுந்து விட்டார். மகா சன்னிதானம் உடனே தம் இடத்தினின்றும் எழுந்து வந்து, விழுந்த பண்டிதமணியைத் தாங்கினார். அப்போது பண்டிதமணி, "பக்தர்களாகிய நாங்கள் தவறுவதும் மகாசன்னிதானங்கள் தாங்குவதும் இயல்பு தானே?" என்று சிலேடை நயத்தோடு குறிப்பிட்டனர். இனி, ஆதீனத்திற்கு வரும்போது, கீழே விழுந்து வணங்க வேண்டாமென்று மகா சன்னிதானம் பண்டிதமணியைக் கேட்டுக் கொண்டாராம்.

*'சோமலெ', பண்டிதமணி, ப. 24.*

## 51. 'எல்லோருக்கும் படி அளப்பவன்!'

திருச்சிராப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றிய நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் ஒரு முறை பண்டிதமணி அவர்களைத் திருச்சிக்கு மேற்கே மூன்றாவது மைலிலுள்ள திருக்கற்குடிக் கோவிலுக்கு அழைத்துச் சென்றாராம். அப்போது, கோவிலில் ஒவ்வோர் இடத்திலும் பண்டிதமணியை வழிகூட்டி அழைத்துச் சென்றமையால் இடையிடையே 'படி இல்லை' என்று சொல்லிக் கொண்டே வந்தார்களாம். அப்போது, பண்டிதமணி, "இறைவன் சன்னிதிக்கு வந்து 'படி இல்லை' என்று சொல்லாதீர்கள்; இறைவன்தானே எல்லோருக்கும் 'படி அளப்பவன்?'" என்று கூறினார்களாம்.

*- 'சோமலெ', பண்டிதமணி, பக். 24-25.*

## 52. 'கம்பர் யார்?'

'கம்பர் யார்?' என்ற கிளர்ச்சி தமிழகத்தில் நடைபெற்ற போது, "கம்பை உடையவன் கம்பன்; அவ்வகையில் பார்க்கும் போது யானே கம்பன்" என்று பண்டிதமணி வேடிக்கையாகச் சொன்னார்கள்.

- *'சோமலெ', பண்டிதமணி, ப. 25.*

## 53. 'அந்த ஊன்றுகோலைத் தருக!'

பண்டிதமணியிடம் பெருமதிப்புடைய ஒரு செல்வர் தம் வீட்டுக்கு அவரை அழைத்தார். மோட்டார் தம் வீட்டு வாயிலில் நின்றதும், அச் செல்வர் பெருமகிழ்ச்சியடைந்து, விரைந்து சென்று, மோட்டார்க் கதவைத் திறந்தார்; ஊன்று கோல் முதலிய பொருள்களைத் தாமே வேகமாக வீட்டுக்குள் கொண்டு போய் வைத்துவிட்டு வந்து, பண்டிதமணியை, "வருக, வருக" என அன்பொழுக அழைத்தார். சிறிதும் பதறாமல், பண்டிதமணி, "அந்த ஊன்றுகோலைத் தருக; இன்றேல் என்னால் அங்கு வர இயலாது!" என்றார்.



- *'சோமலெ', பண்டிதமணி, ப. 26.*

## 54. பண்டிதமணிக்குப் பணிவிடை செய்த அறிஞர்!

*பண்டிதமணி அவர்களின் அறிவை வியந்து, அவருடைய அரிய நட்பைப் பெற விரும்பியவர் பலர். அவ்அறிஞர்கள், அவர்களது உடற்குறையைக் கண்டு உள்ளம் உருகிப் பணிபுரிவார்கள். ஒருகால், பண்டிதமணி அவர்கள் சிகிச்சை செய்து கொள்ள, பொன்னமராவதி மருத்துவ நிலையத்திற்குச் சென்றிருந்தார்கள். அப்போது டாக்டர் வெளியே சென்றிருந்தார். பணியாள் போலக் காட்சி தந்து, சட்டையின்றியும் குடுமியோடும் ஒருவர் மருத்துவ நிலையத்தில் நின்று கொண்டிருந்தார். பண்டிதமணி, அவரைப் பார்த்து, "ஐயா, கொஞ்சம் தண்ணீர் கொண்டு வர முடியுமா?" என்றார். அவர், உடனே சென்று, தண்ணீர் கொண்டு வந்து பணிவுடன் கொடுத்தார். பிறகு, அவரை நோக்கி, "இட்டிலி கொண்டு வருக!" என்றார் பண்டிதமணி. அவர் உடனே சென்று இட்டிலியும் கொண்டு வந்து கொடுத்தார். இந்நிலையில் டாக்டர் வேணுகோபால் நாயுடு அவர்கள் மருத்துவ நிலையத்துக்கு வந்து சேர்ந்தார்கள்; "யான் அறிமுகப்படுத்தி வைக்கு முன்னரே பெரும்புலவர் களாகிய நீங்கள் இருவரும் ஒருவரையொருவர் தெரிந்து கொண்டு விட்டீர்களே!" என்று அவர் சொன்ன பிறகே, தமக்குப் பரிவுடன் பணிவிடை செய்த அந்த அடக்கமான அன்பர்தான் சோழவந்தானூர் மகாவித்துவான் அரசஞ் சண்முகனார் என்பதைப் பண்டித மணி அவர்கள் அறிந்து கொண்டார்கள். அன்று தொடங்கி இருவரும் மிக நெருங்கிய நண்பராயினர்.*

*- 'சோமலெ', பண்டிதமணி, பக். 26-27.*

## 55. 'இரண்டிற்கு மேல் ஒன்றும் தெரியாது!'

*ஒரு முறை ஓர் அமைச்சர் தமிழாசிரியர்களைக் குறை கூறினார். "அவர்களுக்குக் க, கா என்ற இரண்டுக்கு மேல் ஒன்றும் தெரியாது. க என்பது கடவுள், கா என்பது காதல்" என்றார். எல்லோரும் கை கொட்டி அமைச்சரைப் பாராட்டினர். அதன் பின் அங்கே சொற்பொழிவாற்ற இருந்த பண்டிதமணியவர்கள், "தமிழாசிரியர்களுக்குக் க, கா என்ற இரண்டிற்கு மேல் ஒன்றும் தெரியாது என அமைச்சர் கூறுவது உண்மை; அதற்கு மேல் இவர் அறிந்தது என்ன? இவ்வுலகில் கடவுளுக்கும் காதலுக்கும் மேலாக எப்பொருள் இருக்கிறது? இந்த வகையில் தமிழ்ப் புலவர்கள் மாத்திரமல்ல, இங்கிலீஷ் புலவர்களும் அரசியல் நிபுணர் களும் எல்லோரும் ஒன்றுதான். இந்த அறியாதவர் கூட்டத்தில் அமைச்சர் விலக்கல்ல" என்றார்.*

*எல்லோரும் பண்டிதமணியின் அஞ்சாது கண்டிக்கும் திறனை வியந்தனர்.*

*- 'சோமலெ', பண்டிதமணி, பக். 83-84.*

## 56. 'இடைவேளை உண்டாக்கும் இடைவேலை'

*சென்னையில் அரசியலார் கலைக் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருக்கும் புலவர் முத்து இராசாக் கண்ணனார் அவர்கள் ஒரு முறை பண்டிதமணியின் தலைமையில் புதுவை இளைஞர் கழகக் கூட்டத்தில் 'அமெரிக்க நாட்டில் ஆங்கிலக் கவிஞர்' என்ற தலைப்பில் பேசினார்கள். தலைவராகிய பண்டிதமணி அவர்கள் தம் முடிவுரையில் குறிப்பிட்டது சுவையாக இருந்தது. "மிகச் சாமர்த்தியமாக நான் கேட்க ஒரு பேச்சு இன்று நண்பர் இராசாக்கண்ணனார் அவர்களால் நிகழ்த்தப் பெற்றது.* **இடைவேளை உண்டாக்கும் இடைவேலை** *எனக்கு இல்லாமற் செய்துவிட்டார்."*

*- 'சோமலெ', பண்டிதமணி, ப. 125.*

## 57. 'திருப்பாற் கடலில் சீனிவாசன் துயில் கொள்ளுகிறான்!'

ஒரு சமயம் பண்டிதமணி தம் நண்பர் ஒருவர் வீட்டுக்குச் சென்றிருந்தார். அப்போது அவரைக் கண்டுபேசச் சிலர் வந்திருந்தார்கள். பேசிக் கொண்டிருக்கும் போது, வேலைக் காரன் பண்டிதமணிக்குப் பால் கொண்டு வந்து கொடுத்தான். பண்டிதமணி பாலைக் கையிலே வாங்கினார்; அதை ஒரு முறை பார்த்தார். பிறகு, "திருப்பாற்கடலில் சீனிவாசன் துயில் கொள்ளுகிறான்" என்றார்.

இருந்தாற் போலிருந்து அவர் இப்படிக் கூறியது மற்றவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. சிலர் விழித்தனர். வேறு சிலர் எதிரே சுவரில் தொங்கிக் கொண்டிருந்த திருமால் படத்தைப் பார்த்து, 'இதைப் பற்றித்தான் பண்டிதமணி கூறுகிறாரோ' என்று நினைத்தனர். இன்னுஞ் சிலர் ஆழ்ந்து சிந்திக்கலாயினர்.

நகைச்சுவை கடைசியாக விளங்கிவிட்டது. எல்லோரும் சிரிக்கலாயினர். "பாலில் எறும்பு விழுந்து கிடக்கிறது" என்று கூறுவதற்குப் பதிலாகத் தான் "திருப்பாற்கடலில் சீனிவாசன் துயில் கொள்ளுகிறான்" என்று கூறினார் பண்டிதமணி.

- 'சோமலெ', பண்டிதமணி, பக். 265-266.

## 58. 'பெண் மணிகள் - ஒலித்துக் கொண்டுதானிருக்கும்!'

ஒரு கூட்டத்திற்குப் பண்டிதமணி தலைமை வகித்தார். கூட்டத்தின் ஒரு பகுதியில் பெண்கள் இருந்தனர். ஆகையால் கூட்டத்தை அமைதியாக நடத்த முடியவில்லை. கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தவர்கள், பெண்கள் பகுதியிலிருந்து அடிக்கடி சப்தம் வருவதைக் குறிப்பிட்டு அமைதியா யிருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அப்போது பண்டிதமணி "பெண் **மணிகள்** - ஒலித்துக் கொண்டு தானிருக்கும்" என்று வேடிக்கையாகக் கூறினார். பண்டித மணியின் இந்த ஒலியைக் கேட்டதும், கூட்டத்தில் சிரிப்பின் ஒலி எழுந்தது!

*- 'சோமலெ', பண்டிதமணி, ப. 266.*

## 59. 'ரசம் அதிகாரமோ?'

கரந்தையில் ஒரு விருந்து நடைபெற்றது. புலவர் வரத நஞ்சைய பிள்ளை, ரசத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது இருமினார். அப்போது பண்டிதமணி "ரசம் அதிகாரமோ?" என்று கேட்டார். "ரசம் அதிக காரமோ?" என்றும், "ரசம் அதிகாரம் செய்கிறதோ?" என்றும் இரு பொருள் படப் பண்டிதமணி கூறியதை நினைத்துப் புலவரெல்லோரும் வியந்தனர்.

*- 'சோமலெ', பண்டிதமணி, பக். 270-271.*

## 60. 'அதையும் மாற்றி விடுகிறேன்!'

*மிக எளிய நடையில் எழுதுவதைப் பண்டிதமணி விரும்பியதில்லை. எளிமை, கயமை ஆகிவிடக் கூடா தென்பது அவர் கருத்து. அவர் எழுதிய ஒரு பகுதியைப் படித்து விட்டு ஒருவர் அவரிடம் சில இடங்கள் விளங்குவதாகவும், வேறு சில இடங்கள் எளிமையாக எழுதப்படாததால் விளங்கவில்லை என்றும் சொன்னாராம். உடனே, பண்டிதமணி, "அப்படியானால் விளங்கின பகுதியைச் சொல்லுக; அதையும் மாற்றிவிடுகிறேன்" என்று நகைச்சுவை ததும்ப விடை பகர்ந்தனராம்.*

*- 'சோமலெ', வளரும் தமிழ், ப. 60.*

## 61. பாரதியாரின் ஐம்பெருஞ்சிறப்புக்கள்

*பாரதியாருடைய பாடல்களில் அவருடைய நாட்டுப் பற்றைக் காண்கிறோம். அவருடைய மொழிப் பற்றும் அவருடைய பாடல்களிலிருந்து புலனாகின்றது. உயிரினங் களின் மீது அவர் எவ்வளவு பரிவும், இரக்கமும் உடையவரா யிருந்தார் என்பதையும் அப்பாக்களிலிருந்து தெளிவாக உணர முடிகிறது. புரட்சியான கருத்துக்களைத் தெரிவித்த முதல் கவிஞர் பாரதியார். தவிரவும், வருங்காலத்தை முன் கூட்டியே தெரிவித்த பெருமை அவருக்கு உண்டு. இந்த ஐந்து சிறப்புக்களில் ஏதாவது ஒரு சிறப்புக்கு மட்டும் உரியவராய் இருப்பவர் கூட, போற்றத்தக்கவராவார். பாரதியாரோ இவை அனைத்தையும் ஒருங்கே பெற்றுப் பெருங்கவிஞராக விளங்கித் தமிழர் சமுதாயத்திற்கே புத்துயிர் ஊட்டியிருக் கிறார்.*

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், ப. 6.*

## 62. 'தமிழோசை'

*தமிழை எங்கே வளர்க்கலாம் என்ற வினாவுக்கு விடை கூறுவார் போலப் பாரதியார் 'தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்' என்று பாடியிருக்கிறார். 'தமிழோசை' என்ற அழகான சொற்றொட ரையும் அவர் பயன்படுத்தியிருக்கிறார். 'வானொலி' என்ற சொல்லைப் பயன்படுத்த நம் நாட்டில் வம்பும் சண்டையும் தேவைப்படுகிறது. ஆனால், இலண்டனிலிருந்து தமிழ் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பும் போது பிரிட்டிஷ் வானொலி நிலையத்தார், பாரதியாரிடமிருந்து இந்தச் சொற்றொடரைக் கடன் வாங்கி, 'தமிழோசை' என்ற தலைப்பில் தமிழ் நிகழ்ச்சிகளை உலகெலாம் பரப்பி வருகிறார்கள்.*

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், பக். 9-10.*

## 63. 'தமிழ்ப் பாட்டு ஏன் கெட்ட விஷயத்தைத் தாங்கி நிற்க வேண்டும்?'

கவிமணி இயற்றிய பாடல்களில் மிகுதியானவை வாழ்த்துப் பாக்கள். 'சந்ததமும் வாழ்க தழைத்து,' 'மண்ணுலகில் வாழ்க மகிழ்ந்து', 'நித்தமும் வாழ்க நிலைத்து' என்ற ஈற்றடிகளை நிரந்தரமாக வைத்துக் கவிமணி நூற்றுக்கணக்கானவர்களை வாழ்த்தியிருக்கிறார். இவ்வாறு வாழ்த்துப் பெற்றிருப்பவருள் சிலர், நிறைந்த தகுதிகளோ அன்றி இனிய இயல்புகளோ இல்லாதவராக இருக்கக்கூடுமே என்று ஒருவர் கேட்டார். அதற்குக் கவிமணி தெரிவித்த மறுமொழி சுவையாக இருந்தது. கேள்வி கேட்டவர் முகத்தை உற்றுப் பார்த்துக் கொண்டே, கவிமணி அமைதியாகச் சொன்னார்கள்: "ஒரு வகையில் நீங்கள் கருதுவது சரி. ஆனால், நானும் இறந்து போவேன், பாடப்பட்டவரும் இறந்து போவார். எத்தனையோ நூற்றாண்டாகும். பாட்டு நிற்கும். ஒரு தமிழ்ப் பாட்டு ஏன் கெட்ட விஷயத்தைத் தாங்கி நிற்க வேண்டும்? நல்ல விஷயத்தைத் தாங்கித் தமிழ்ப் பாட்டுக்கள் நிலைக்கட்டுமே!"

இந் நிகழ்ச்சி கவிமணியின் தூய உள்ளத்திற்குச் சான்று.

- *'சோமலெ', பிரயாண இலக்கியம், ப. 86.*

## 64. தமிழ்ப் பண்பாட்டின் உருவமாக விளங்கிய தே.வி.

பல ஆண்டுகளுக்கு முன் ஓர் அமெரிக்கர் இந்தியாவுக்கு புறப்பட்டார். இந்தியாவில் பார்க்க வேண்டியவை எவை எவை என்று அவர் ஒரு நண்பரைக் கேட்டாராம். "தாஜ்மஹால், இமயமலை, மகாத்மா காந்தி" என்று அவருடைய நண்பர் குறிப்பிட்டாராம். அது போன்றே தமிழ்நாட்டின் தென்பகுதியான நாஞ்சில் நாட்டில் காணத் தக்கவை என்ன என்று கேட்பவரிடம், "கன்னியாகுமரி, சுசீந்திரம் கோவில், தேசிக விநாயகம் பிள்ளை" என்று பெருமிதத்துடன் சொல்லிக் கொள்வது தமிழ்நாட்டில் வழக்கமாக இருந்து வந்தது,

அத்தகைய ஒரு தமிழ் மலை சாய்ந்து விட்டது. இலக்கியத் தென்றல் ஓய்ந்து விட்டது. தலைசிறந்த ஒரு கலைஞர் காலமாகிவிட்டார். மனிதருள் மாணிக்கமாக விளங்கிய ஒரு பெரியார் உயிர் நீத்துவிட்டார். நாஞ்சில் நாட்டுத் தமிழருக்கு வழிகாட்டிய ஜோதி அணைந்துவிட்டது. தமிழ்ப் பண்பாட்டின் உருவமாக விளங்கிய தே.வி. இறைவன் திருவடி நிழலை அடைந்துவிட்டார்.

*- 'சோமலெ', பிரயாண இலக்கியம், ப. 63.*

## 65. ‘இறந்தும் இறவாதவர்’

பெரியவர்கள் சில குறிக்கோள்களுக்காக வாழ்கின்றனர். அந்தக் குறிக்கோள்களுக்கு நாட்டு மக்களிடம் ஆதரவு இருக்கும் வரை அவர்கள் வாழ்வதாகவே கொள்ளப்படும். ஆகையால், அவர்களுடைய பிறந்த நாளைக் கொண்டாடு வதா அல்லது இறந்த நாளைக் கொண்டாடுவதா என்பது பற்றி மாறுபட்ட கருத்துக்கள் நிலவுகின்றன. இத்தகைய கருத்து வேறுபாட்டுக்கு அழகப்பர் இடந்தரவில்லை. அவர் இறந்த நாள் (மார்ச் 5) தான் அவர் பிறந்த நாளும் ஆகும். இறந்தும் இறவாதவர் இவரே.

*- ‘சோமலெ’, பல்சுவைக் கட்டுரைகள், ப. 37.*

## 66. நாட்டை உருவாக்கும் சான்றோர்கள்

பொது வாழ்வில் ஈடுபடுவோர் மூவகையினர். சுயநலமி, அரசியல்வாதி, நாட்டை உருவாக்கும் சான்றோர்.

சுயநலமி, தன் குடும்பத்துக்குப் பணம் சேர்ப்பதிலும், தன் உறவினர்களுக்கு வேலை கொடுப்பதிலும், தன் புகழைப் பரப்புவதிலும், தனக்குச் சிலைகள் முதலியன வைத்துக் கொள்ளுவதிலும், தனக்குப் பிறகு தன் உறவினர்களை அரியாசனத்தில் அமர்த்துவதிலும் கவனம் செலுத்துவான்.

அரசியல்வாதி அடுத்த தேர்தலில் தானும் தன் கட்சியும் வெற்றி பெற வேண்டும் என்ற ஒரே குறிக்கோளை நிறைவேற்ற எதையும் துணிந்து செய்வான்.

நாட்டை உருவாக்கும் சான்றோர்கள் (Statesmen) அடுத்த தலைமுறையினரைப் பற்றியும் நாட்டு நலனைப் பற்றியும் மட்டுமே சிந்திப்பார்கள்.

ஓமந்தூரார் மூன்றாவது வகையினர். மனைவி இறந்த போது இவர் கவலைப்படவில்லை. "இவனுக்கு இந்த அளவில் இல்வாழ்க்கை போதும் என்பது இறைவனின் ஆணை" என்று கருதினார். மறுமணம் செய்து கொள்ள இசையவில்லை.

மகன் இறந்த போது இவர் அழவில்லை. பரிபக்குவ நிலை அடைந்துவிட்டார். பிணத்தைப் பார்க்கவும் செல்லவில்லை. தம்பியை அனுப்பி ஈமச் சடங்குகளைச் செய்ய ஏற்பாடு செய்தார்.

பதவி வந்த போது ஏற்கத் தயங்கினார்.

பதவியிலிருந்து விலகியபோது, நிலைகுலையவில்லை. மனம் கலங்கவில்லை. "என் பின்னவன் பெற்ற செல்வம் யான் பெற்ற செல்வமன்றோ?" என்று இராமபிரான் பரதனிடம் அரசை ஒப்புவித்தார் அல்லவா? அதுபோல திரு.பி.எஸ். குமாரசாமி ராஜாவிடம் ஒப்படைத்து விட்டு, காட்டுக்குச் சென்ற இராமனைப் போலவே 'அன்றலர்ந்த செந்தாமரை மலர்' போன்ற முகத்துடன் விவசாயியாக செயின்ட் ஜார்ஜ் கோட்டைக்கு வந்த ஓமந்தூரார் விவசாயியாகவே, தம் பண்ணைக்குத் திரும்பினார்.

- *'சோமலெ', விவசாய முதலமைச்சர், பக். 2-3.*

## 67. 'எங்கே ஐயா கோப்பு?'

அரசாங்க பைல்கள் மீது விரைவாக நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்பதில் ஓ.பி.ஆர். (ஓ.பி. ராமசாமி ரெட்டியார்) அக்கறை காட்டினார். சுற்றுப் பயணம், பேட்டி, சட்ட சபைக் கூட்டம் ஆகியவை குறைக்கப் பட்டால், அரசாங்க இயந்திரம் நன்றாகச் செயல்படும் என்று கருதினார்.

ஒரு துணைச் செயலாளர், ஒரு கோப்பின் மீது நடவடிக்கை எடுக்காமல் சுணங்கி வந்தார். அவரைக் கூப்பிட்டார் ஓ.பி.ஆர். "உன்னிடம் இந்தக் கோப்பு எவ்வளவு நாளாக இருக்கிறது?"

"ஒரு மாதம்."

"சரி, இன்னும் எவ்வளவு நாளாகும்?" என்று கேட்டார் ஓ.பி.ஆர்.

"செக்ரடரியிடம் கையெழுத்து வாங்கி நாளைக்கு முதலமைச்சரிடம்..." என்றார் துணைச்செயலாளர்.

மறுநாளும் கோப்பு வரவில்லை. ஓ.பி.ஆர். மீண்டும் துணைச் செயலாளரை வரவழைத்தார். "எங்கே ஐயா கோப்பு? உனக்கு 24 மணி நேரம் கொடுக்கிறேன். கோப்பு இங்கு வர வேண்டும் அல்லது நாளை இதே நேரம் உன் வேலைக்குச் சீட்டு கிழிந்துவிடும்" என்றார்.

சீட்டு கிழிவதற்குக் குறிப்பிட்ட கெடுவுக்கு முன் கோப்பு வந்து விட்டது.

- 'சோமலெ', விவசாய முதலமைச்சர், ப. 285.

## 68. வாழ்ந்தும் வாழாதவரும் செத்தும் சாகாதவரும்

உலகத்தில் தோன்றிய மக்களை வாழ்ந்தும் வாழாதவர், செத்தும் சாகாதவர் என்று இரு கூறுகளாகச் சொல்லலாம்.

நாள்தோறும் நாம் சந்திக்கும் பலர், தங்களால் நாட்டுக்கோ மொழிக்கோ, மக்கள் சமுதாயத்துக்கோ எவ்விதப் பயனும் இன்றித் தம் வாழ்நாளை ஓட்டிச் செல்கின்றனர்.

பலர் தங்கள் மனைவி மக்கள் நலத்தை மட்டுமே பேணும் தன்னலக்காரர்களாக விளங்குகின்றனர்.

வேறு சிலர், தங்கள் குடும்பத்திற்குக் கூடப் பயன்படாமல் பூமிக்குப் பாரமாக இருந்து வருகின்றனர். இவர்கள் வெந்த சோற்றைத் தின்று, விதி வந்தபோது சாவோம் என்று இருப்ப வர்கள், 'என்று வருவான் எமன்' என்று எதிர்நோக்குபவர்கள்.

சுருங்கச் சொன்னால், அவர்கள் நடைப் பிணங்கள் அல்லது நடமாடும் பிணங்கள்!

மக்களுடைய மேம்பாட்டுக்காகவும், அவர்களுக்கு வழி காட்டுவதற்காகவும், அவர்களை உய்விப்பதற்காகவும் தோன்றியவர்கள் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்கள் என்று போற்றப்பெறுகின்றனர்.

கௌதம புத்தர், மகாவீரர், வள்ளலார், மகாத்மா காந்தி போன்றவர்கள் இந்த வகையில் இடம்பெறுகிறார்கள்.

இவர்கள், சில கொள்கைகளுக்காக வாழ்ந்தவர்கள். அந்தக் கொள்கைகளுக்கு மக்களிடையே ஆதரவு இருக்கும் வரை இவர்கள் வாழ்வதாகவே கருத வேண்டும்.

ஓமந்தூரார், செத்தும் சாகாதவர் என்று சொல்லலாம். அவருடைய பூதவுடல் தான் மறைந்திருக்கிறது. அவருடைய புகழ் உடம்பு வாழ்கிறது.

ஓபி. ஆரின் புகழ் உடம்பு என்பது என்ன? அவர் கண்ட நிறுவனங்களே, அவருடைய புகழ் உடம்பு எனலாம்.

- *'சோமலெ', விவசாய முதலமைச்சர், பக். 411-412.*

## 69. அரவிந்தரின் அறிவுரைகள்

அரவிந்தர் ஒரு பெரிய மகான் என்பதும் அவருடைய அறிவுரைகள் உலகத்தாரால் பாராட்டப் பெற்றிருப்பதும் இந்தியாவுக்குப் பெருமையாகும்... அவருடைய அறிவுரைகள் சிலவற்றை ஈண்டுத் தருவோம்:

- அறிவாற்றலால் கடவுளை அறிய இயலாது. ஆத்மீக சக்தியாலேயே அவரை உணரலாம்.
- தவம் இருப்பது நற்பயன் தரும். தவத்தின் சிறந்த பகுதி மன அமைதியே.
- கடவுள் பல அம்சங்கள் படைத்தவர். ஒவ்வொரு மதமும் சில அம்சங்களை மட்டுமே பின்பற்றுகிறது.
- விருப்பு, வெறுப்பு, பொறாமை, பெருமை, ஆசை, சோம்பல், பயம், ஐயப்பாடு, விரோதம் இவை இல்லா விட்டால் கடவுள் நம்பிக்கை இல்லாதவருங் கூட, தவம் செய்து கடவுளை உணரலாம்.
- பேசாதே, செய். முடிவைத் தெரிவிக்காதே, அதன் விளைவுகளை உணர்ந்து கொள்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார்,*
*நமது தலைநகரம், பக். 67-68.*

## 70. நோய் இன்றி நூறு ஆண்டுகளுக்கு மேல் வாழ...

சர். எம். விசுவேசுவரையா ஒரு பொறியியல் அறிஞர். மைசூர் அருகே காவேரி ஆற்றின் மீது கட்டப்பெற்றிருக்கும் 'கிருஷ்ணராஜ சாகர்' என்ற அணைக்கட்டை இவர்தான் கட்டினார். இதன் பிறகே மேட்டூர் அணை போன்ற பெரிய அணைகள் கட்டலாம் என்ற எண்ணம் இந்தியாவில் ஏற்பட்டது.

விசுவேசுவரையா, கிருஷ்ணராஜசாகர் அணைக்கு அருகே 'பிருந்தாவன்' என்ற அழகான பூங்காவை அமைத்தார். இன்றும் இந்தப் பூங்காவைப் பார்க்கும் நம் நாட்டினரும், அயல்நாட்டினரும் இதன் அழகில் மயங்கி விடுகிறார்கள். அணைக்கட்டுகளுக்கு அருகில் அழகான பூங்காக்களை ஏற்படுத்தும் பழக்கம் இப்போது பரவியிருக்கிறது.

விசுவேசுவரையா 102 ஆண்டுகள் உயிரோடு இருந்தார். இவர் ஒரு நாளாவது உடல் நலம் இல்லாமல் இருந்தது கிடையாது. எப்போதும் சுறுசுறுப்பாக இருந்தார். எந்த நேரமும் கால் சட்டை, கோட்டு, சரிகைத் தலைப்பாகை ஆகியவற்றுடன் தான் அவரை எல்லோரும் பார்த்திருக்கிறார் கள். வேறு உடையிலோ, தலைப்பாகை இல்லாமலோ அவரை ஒருவரும் பார்த்ததில்லை.

"உங்களுடைய நீண்ட வாழ்நாளுக்கு என்ன காரணம்?" என்று அவரைப் பலர் கேட்டார்கள். "நான் தினமும் காலையில் குளிக்கிறேன்; குறித்த நேரத்தில் சாப்பிடுகிறேன்; அளவோடு உண்கிறேன்; நேரப்படித் தூங்குகிறேன்; தினமும் நான்கு மைல் நடக்கிறேன்; ஒழுங்கான பழக்க வழக்கங்களைக் கடைப்பிடிக்கிறேன். நீங்களும் இவ்வாறு செய்தால் டாக்டரிடம் போகாமல் நோய் இன்றி நூறு ஆண்டுகளுக்கு மேல் வாழலாம்" என்று அவர் சொன்னார்.

*- 'சோமலெ', சிறுவர்களுக்கு ஒரு சில கதைகள், பக். 37-38.*

## 71. விசுவேசுவரையா பார்த்த சொந்த வேலை

சர். எம். விசுவேசுவரையா மைசூர் சமஸ்தானத்துத் திவானாக இருந்தார். அவர் ஆட்சியில் இரும்புத் தொழிற் சாலை, காகித ஆலை முதலியன அரசினரால் தொடங்கப் பெற்றன. பெங்களூரில் அறிவியல் ஆராய்ச்சிக் கூடங்களும் உண்டாயின. அவருடைய 101-ஆவது பிறந்த நாளில் அவருடைய உருவம் பொறித்த அஞ்சல் தலையை இந்திய அரசு வெளியிட்டது.

விசுவேசுவரையா நேர்மையானவர்; நாணயமானவர்; அரசாங்கப் பணத்தை ஒரு காசு கூட அவர் வீணாகச் செலவிட வில்லை.

திவான் (முதல் அமைச்சர்) வேலை பார்த்தபோது வெளியூர்களில் அவர் சுற்றுப் பயணம் சென்றார். அப்போது ஆங்காங்குள்ள அரசினரின் சுற்றுலா மாளிகைகளில் தங்கினார். அக்காலத்தில் அந்த விடுதிகளில் மின்சாரம் கிடையாது. காவல்காரன் அரசாங்கக் கணக்கில் மெழுகுதிரி வாங்கி விளக்கேற்றுவான். அந்த வெளிச்சத்தில் விசுவேசுவரை யா அரசாங்கப் பைல்களைப் படிப்பார்.

அரசாங்க வேலைகளைப் பார்த்து முடிந்ததும், அந்த மெழுகுதிரி விளக்குகளை அணைத்து விடுவார். தம் செலவில் வாங்கிய மெழுகுதிரிகளை ஏற்றி, அதன் பிறகு சொந்த வேலைகளைக் கவனிப்பார். அவர் பார்த்த சொந்த வேலை என்ன தெரியுமா? தம் அறிவு வளர, பல நூல்களைப் படிப்பதுதான். 102-ஆவது வய்து வரை அவர் புதிய நூல்களைப் படித்துக் கொண்டே இருந்தார்.

*- 'சோமலெ', சிறுவர்களுக்கு ஒரு சில கதைகள், பக். 38-40.*

## 72. 'புகழ் தேடப் புறப்பட்டுப் போனவர்!'

*சிறுவர்களுக்கான கதைகள் எழுதி உலகெங்கும் புகழ் பெற்றுள்ள ஹான்ஸ் கிறிஸ்டியன் ஆண்டர்சன், டென்மார்க்கு நாட்டினர்.*

இவர் ஒரு கிராமத்தில் இருந்தவாறு பெரியவர்களுக்கு நாடகங்கள் எழுதினார். பிறகு நாட்டின் தலைநகரான கோப்பன்ஹேகனுக்குச் சென்றார். 'எதற்காக அங்கே போகிறாய்?' என்று அவருடைய அன்னை கேட்டார். 'புகழ் தேட' என்றார் ஆண்டர்சன். 'எல்லோரும் பொருள் தேடப் போவார்கள், நீ புகழ் தேடப் போவதாகச் சொல்லுகிறாயே?' என்று அன்னை மறு கேள்வி கேட்டார். பதில் சொல்லாமல் புறப்பட்டார் ஆண்டர்சன்.

கோப்பன்ஹேகனில் ஏதோ ஒரு வேலை பார்த்துக் கொண்டு, ஓய்வு நேரத்தில் குழந்தைகளை அழைத்து, கதைகள் சொன்னார். அவை எங்கு பார்த்தாலும் பரவி இவர் பெயர் கோப்பன்ஹேகனில் வீடுதோறும் அறிமுகமாயிற்று. குழந்தை இலக்கியத்தின் தந்தையாக மதிக்கப்பெறும் இவருடைய கதைகள் ஏராளமான மொழிகளில் மொழி பெயர்க்கப்பெற்று, உலகப் புகழ் அடைந்து விட்டார், இவருடைய பிறந்த நாளை டென்மார்க் நாட்டு மக்கள் அனைவரும் கொண்டாடி வருகின்றனர். இவருடைய காலம் 1805-1875.

*- சோமலெ, உலக நாடுகள், ப. 213.*

## 73. நியூட்டனும் அவரது வளர்ப்பு நாயும்

நியூட்டன் இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்தவர். நம் நாட்டில் சி.வி . இராமனைப் போல் அவர் ஒரு அறிவியல் மேதை.

நியூட்டன் ஒரு நாய் வளர்த்து வந்தார். அந்த நாயின் பெயர் 'டயமண்டு'.

வெளிச்சத்தைப் பற்றி இருபது ஆண்டுக் காலம் நியூட்டன் ஆராய்ந்தார். ஆராய்ச்சியில் தெரிந்த கருத்துக் களை அவ்வப்போது சிறு தாள்களில் குறித்து வைத்தார். ஒரு நாள் இரவு அந்தக் குறிப்புக்களை மேசை மீது வைத்துப் படித்துக் கொண்டிருந்தார். மேசை மீது ஒரு மெழுகுவர்த்தி விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவர் எழுதிய குறிப்புக்கள் அந்த விளக்கருகே குவியலாகக் கிடந்தன.

நியூட்டன் அவற்றை அங்கு வைத்துவிட்டுச் சற்று உலாவ வெளியே சென்றார். அவருடைய நாய் மேசைக்குக் கீழே படுத்துக் கொண்டிருந்தது. நியூட்டன் வெளியே போனதும் நாய் மேசை மீது தாவிற்று. அது தாவியதால் மெழுகுவர்த்தி விளக்கு சாய்ந்தது. நியூட்டனின் காகிதங்கள் யாவும் தீக்கிரை யாயின. அப்போது நியூட்டன் அறைக்குள் நுழைந்தார். அவருடைய இருபதாண்டு ஆராய்ச்சி சாம்பலாய்ப் போனதை அறிந்து வருந்தினார். ஆயினும், நாய் மீது அவர் கோபப்படவில்லை. எப்போதும் போல் அந்த நாயிடம் அவர் அன்பு காட்டி வந்தார்.

தம்முடைய ஆராய்ச்சி வீணானதால் உலகத்துக்குக் கேடு ஏற்பட்டதாக அவர் நினைக்கவில்லை. தம் அறிவைக் குறைந்த அறிவு என்றே அவர் நினைத்து வந்தார். அதன் பிறகு முப்பத்தைந்து ஆண்டுகள் பல ஆராய்ச்சிகளைச் செய்த பிறகு அவர் இறந்து போனார்.

*- 'சோமலெ', சிறுவர்களுக்கு ஒரு சில கதைகள், பக். 5-7.*

## 74. செல்வரை வெட்கித் தலைகுனிய வைத்த சாக்ரடீஸ்

கிரேக்க நாட்டில் அட்டிகா மாநிலத்தில் அலிஸ்பைடிஸ் என்பவர் வாழ்ந்தார். அந்த மாநிலத்தில் அவருக்கு ஒப்பான செல்வர் எவரும் இல்லை.

தத்துவ மேதை சாக்ரடீஸ் ஒரு நாள் அலிஸ்பைடிஸ் வீட்டுக்குச் சென்றிருந்தார். கிடைத்த வாய்ப்பை நழுவ விரும்பாத அலிஸ்பைடிஸ் தம் செல்வ வளத்தை விவரித்தார். அவருடைய பேச்சில், ஒவ்வொரு சொல்லிலும் செல்வச் செழிப்பால் ஏற்பட்ட களிப்போடு கர்வமும் தொனித்தது. தத்துவ மேதை சற்று நேரம் மௌனமாக இருந்தார்.

பின்னர், சாக்ரடீஸ், அலிஸ்பைடிஸிற்கு உலகப் படம் ஒன்றைக் காட்டினார்.

"இதில் கிரேக்க நாடு எங்கே இருக்கிறது?"

"இதோ" என்று அடையாளம் காட்டினார் செல்வர்.

"அட்டிகா மாநிலம் எங்கு இருக்கிறது?" என்று சாக்ரடீஸ் அடுத்த கேள்வி போட்டார். அதையும் சுட்டிக் காட்டினார் செல்வர். "இ ந்தப் படத்தில் உங்கள் கிராமத்தின் பெயர் உள்ளதா?" என வினவினார் தத்துவ மேதை.

"இப்படிப்பட்ட சிற்றூர்கள் நூற்றுக்கணக்கில் இருக்கின்றனவே, இவற்றையெல்லாம் குறிப்பிட இயலுமா?" பதில் கேள்வி கேட்டார் செல்வர்.

"தங்களுடைய நிலம் வீடு வாசல் இவற்றைக் காட்டமுடியுமா?" என்றார் சாக்ரடீஸ்.

"இதென்ன கேள்வி? அசட்டுக் கேள்வி! கிராமத்தைக் காட்ட இயலாத போது, என் நிலம், என் வீடு ஆகியவற்றைக் காட்டும் பிரச்சினையே எழாது. அவை, கடலில் ஒரு நீர்த்துளி போன்றவை" என்றார் அலிஸ்பைடிஸ்.

"நீர்த்துளி போன்றது உங்களுடைய நிலமும் சொத்தும் எனின், அதைப் பற்றிப் பெருமைப்படுவது சரியா?" என்று கேட்டார் தத்துவஞானி.

சாக்ரடீஸ் இவ்வாறு கேட்டதும் அலிஸ்பைடிஸ் வெட்கித் தலை குனிந்தார்.

*- 'சோமலெ', விவசாய முதலமைச்சர், பக். 201-202.*

## 75. பண்பட்ட மனிதனுக்கு உரிய தகுதிகள்

பண்பட்ட மனிதனாகவும் நாகரிகமுடைய மனிதனாகவும் இருக்க வேண்டுமென்று அனைவரும் விரும்புகிறோம். இதற்குரிய தகுதிகள் எவை? எவை?

1. பொய் சொல்லக் கூடாது.

2. திருடக் கூடாது.

3. பிறருடைய சொத்துக்களையும் பொருள்களையும் மதிக்க வேண்டும்.

4. உயிரினங்கள்பால் அன்புடையவராய் இருக்க வேண்டும்.

இவ்வாறு கூறியவர் மருத்துவத் துறையில் அடர்த்தியான காடுகளிடையே அப்பாவி மக்களுக்கு அருந்தொண்டாற்றிய ஆல்பர்ட் ஸ்குவைட்சர்.

ஆல்பர்ட் ஸ்குவைட்சர் உலக மேம்பாட்டிற்கு உழைத்த பெரியார். மனித குல முன்னேற்றத்திற்குப் பாடுபட்ட பேரறிஞர். இணையற்ற சிந்தனையாளர்.

மனிதன், மரபு என்னும் சிறைக்குள் அடைபட்டு விடலாகாது. சிந்திக்கும் ஆற்றலை ஒருபோதும் குறைத்துக் கொள்ளக் கூடாது என்பது இவருடைய உறுதியான கருத்து.

- *'சோமலெ', ஆப்பிரிக்க நாடுகள் வரிசை - 11, சஹாரா, ப. 28.*

# 5

## செய்தி உலகின் சில துளிகள்



### 76. ஒரு கோடீசுவரனின் சோகக் கதை

ஒரு பத்திரிகை நடத்துவதில் உள்ள இடர்ப்பாடுகளை விளக்கும் போது சோமலெ கூறும் ஒரு சுவையான கதை இது:

“ஒருவன் ஒரு பெரிய கோடீசுவரனாக இருந்தான். பணத்தை எப்படிச் செலவு செய்வது என்று அவனுக்குத் தெரியவில்லை.

கோயில்கள் கட்டினான். அதிலும் அவன் செலவு செய்ததற்கு மேல் உண்டியலில் பணம் சேர்ந்தது. குளங்கள் வெட்டினான். அவற்றிலிருந்து புதையல் கிடைத்தது. கல்விச் சாலைகள் நிறுவினான் . அவற்றையும் அரசாங்கம் எடுத்துக் கொண்டு நஷ்ட ஈடு கொடுத்தது. இவ்வாறு அறச் செயல்கள் செய்துங் கூட அவனுடைய பணம் குறையவில்லை.

தேர்தலுக்கு நின்றான். அதில் கூட அவனுடைய பணத்தில் ஒரு பகுதி தான் அழிந்தது. குதிரைப் பந்தயத்துக்குச் சென்றான். அவன் கட்டிய குதிரைகள் எல்லாம் வெற்றி பெற்றன.

பிறகு சூதாட்டமான பல தொழில்களைச் செய்தான். ஒன்றிலும் அவன் பணம் கரையவில்லை.

கடைசியாக விளம்பர ஆசை மேலிட்டு, ஒரு பத்திரிகையைத் தொடங்கினான். பத்து ஆண்டுகளில் பணம் முழுவதும் காலியாயிற்று.''

*- சோமலெ, தமிழ் இதழ்கள், பக். 1-2.*

## 77. செய்தி எது?

பத்திரிகைக் கல்வி வகுப்பில் சொல்லிக் கொடுக்கப்படும் முதல் பாடம் வருமாறு:

“நாய் மனிதனைக் கடிப்பது செய்தியன்று. அது நாயின் இயல்பு. அன்றாட நிகழ்ச்சி.

மனிதன் நாயைக் கடிப்பது அபூர்வமாக, மிக அரிதாக நடைபெறக் கூடியது. எனவே அது செய்தி. அதைக் கொட்டை எழுத்தில் வெளியிட வேண்டும்.”

*- சோமலெ, தமிழ் இதழ்கள், ப. 9.*

## 78. 'அப்படியானால் இன்று நமது பத்திரிகை வராது!'

ஒரு நாள் 'நவசக்தி' அலுவலகத்தில் துணை ஆசிரியராக இருந்த கல்கியிடம் அச்சுக் கோக்கும் தலைமை ஊழியர் வந்து, "இன்று யார் தலையங்கம் எழுதப் போகிறார்கள்?" என்று கேட்டாராம். "ஏன் அப்பா, நீ அதைக் கேட்கிறாய்? வழக்கம் போலத்தான், ஐயா (திரு.வி.க) தலையங்கம் எழுதுவார், நான் துணைத்தலையங்கம் எழுதுவேன்" என்றாராம் கல்கி.

"அப்படியானால் இன்று நமது பத்திரிகை வராது" என்று அந்த ஃபோர்மேன் சொல்லிவிட்டாராம். காரணம் என்ன என்று வினவ, அவர் சொன்ன பதில் இதுதான்:

"திரு.வி.க. ஆச்சரியக் குறியாகப் போட்டுத் தள்ளிவிடுவார். இங்கு டைப் இல்லை. ஆகையால் ஆச்சரியக் குறி டைப் 5 பெட்டியும், கேள்விக் குறி டைப் 2 பெட்டியும் உடனே டைப் பவுண்டரியிலிருந்து வரவழைத்தால் தான் பத்திரிகை வரும்."

- *சோமலெ, தமிழ் இதழ்கள், ப. 19.*

## 79. 'செத்தது தான் செத்தாரே...?'

தமிழ்ப் புனைகதை இலக்கியத்திற்கு அழகும் மெருகும் ஊட்டிய இலக்கியக் கலைஞர்களில் கல்கிக்குச் சிறப்பான இடம் உண்டு. 'ஆனந்த விகட'னில் அவர் 'தியாக பூமி' என்ற தொடர்கதை எழுதி வந்த போது திரு. எஸ்.எஸ். வாசன் சொன்னதை இங்கே படிக்க விரும்புகிறேன்:

"தமிழ்நாட்டில் தொடர் கதைக்கு ஒரு மதிப்பும் அசையாத ஸ்தானமும் சம்பாதித்துக் கொடுத்தவர் கல்கி."

அவர் இறந்து விட்டதாகச் சில பத்திரிகைகளில் தவறான செய்தி ஒன்று வந்துவிட்டது. அப்போது,

"செத்ததுதான் செத்தாரே, 'சிவகாமியின் சபத'த்தை முடித்துவிட்டுச் செத்தாரா?"

- என்று மக்கள் ஏங்கினார்கள்.

*- சோமலெ, தமிழ் இதழ்கள், ப. 46.*

## 80. பாரதியார் நடத்திய பத்திரிகைக்குச் சந்தா!

கவிஞர் பாரதியார், 1906-ஆம் ஆண்டு 'இந்தியா' என்னும் பத்திரிகையை நடத்தினார். அந்தப் பத்திரிகையின் ஆண்டுச் சந்தா விவரம் கீழ்க்கண்டவாறு இருந்தது:

| | |
|---|---|
| எல்லா கவர்ன்மெண்டாருக்கும் | – ரூ. 50 |
| ஜமீன்தார்கள், ராஜாக்களுக்கு | – ரூ.30 |
| மாதம் ரூ. 200–க்கு மேற்பட்ட வருமானம் உள்ளவர்களுக்கு | – ரூ. 15 |
| மற்றவர்களுக்கு | – ரூ. 3 |

*- சோமலெ, தமிழ் இதழ்கள், பிற்சேர்க்கை: xxiv, p.ciii.*

6

## நாட்டுப்புற மக்களின் மரபும் பண்பாடும்



### 81. ஐரோப்பியர் தொகுத்த நாட்டுப் பாடல்கள்

நாட்டுப்பாடல்களை ஐரோப்பியர்கள்தான் முதலில் தொகுத்தார்கள். அவற்றை ஒலிப்பதிவும் செய்தார்கள். அவை தீண்டப்படாத இலக்கியங்களாகக் கருதப்பட்டு, மரபு வழி வந்த தமிழ்ப் புலவர்களால் புறக்கணிக்கப்பட்டன. இப்போது அவை இலக்கியங்க்ளாக ஏற்றுக்கொள்ளப்பட்டு, பல்கலைக் கழகங்களில் முதுகலைப் பாடத் திட்டத்திலும் ஆராய்ச்சி யிலும் இடம்பெற்றிருக்கின்றன.

*- 'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 27.*

## 82. உலகியல் அனுபவமும் இலக்கிய மணமும் கமழும் தாலாட்டு

தாலாட்டுக்கள் கேள்வி அறிவு மட்டும் உடைய தாய்மார்களால் பாடப்பெற்றவை. இருந்த போதிலும் கூட இவற்றில் அவர்களுடைய உலகியல் அனுபவத்தையும், இலக்கிய மணம் கமழும் சொற்களையும் காணலாம். குழந்தைகளை உறங்க வைப்பதற்காகவே தாலாட்டுகள் பாடப்பெறுகின்றன.

ஒரு மூதாட்டியாரின் தாலாட்டு இது:

"ஆரடித்தார் ஏனழுதாய்
கொம்புக் கனியே
கோதுபடா மாங்கனியே
வம்புக் கழுதாயோ
வாயெல்லாம் பால் வடிய.




மாமன் அடிச்சானோ
மல்லிகைப் பூச் செண்டாலே?
அத்தை அடித்தாளோ
அரளிமலர்ச் செண்டாலே?
அடித்தாரைச் சொல்லியழு
ஆக்கினைகள் செய்து வைப்போம்
தொட்டாரைச் சொல்லியழு
தோள்விலங்கு போட்டு வைப்போம்!

ஆரும் அடிக்கவில்லை
ஐவிரலும் தீண்டவில்லை
தானா அழுகின்றான்
தம்பி துணை வேணுமென்று
அவனா அழுகின்றான்
ஆத்தாள் மடி தேடி."

- *'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 158.*

## 83. குழந்தைக்ளுக்கு இறை நம்பிக்கையை வளர்க்கும் தாலாட்டு

*குழந்தைகளுக்கு இறை நம்பிக்கையை வளர்க்கக் கீழ்க் கண்ட தாலாட்டு, இரவு உறங்குவதற்கு முன் பாடப்பெறும்:*

**"அரியின்னு பாய்விரித்து**
**அச்சுதான்னு பேர் சொல்லி**
**கிருஷ்ணான்னு படுத்தவர்க்கு**
**ஒருநாளும் கேடில்லை**
**கோவிந்தான்னு படுத்தவர்க்கு**
**ஒருநாளும் குறைவில்லை."**

*படுத்து எழுந்ததும், படுக்கையில் இருந்தவாறே பாடும் பாட்டு இது:*

**"பொழுது எப்ப விடியும்?**
**பூ எப்ப மலரும்?**
**சிவன் எப்ப வருவார்?**
**பலன் எப்ப தருவார்?**

*பொழுது என்பது சூரியன் அல்லது பகற்பொழுதையும், பூ என்பது தாமரைப் பூவையும் குறிக்கும்.*

*- 'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், பக். 160-161.*

## 84. இலக்கியச் சிறப்புடைய ஒப்பாரிப் பாடல்கள்

*தமிழில் ஏராளமான ஒப்பாரிப் பாடல்கள் உள்ளன. இவை இலக்கியச் சிறப்புடையனவாகவும் இருக்கின்றன.*

*இளமையில் கணவரைப் பறிகொடுத்தவளின் ஒப்பாரியிலிருந்து ஒரு பகுதி:*

**"சில்லென்று பூத்த**
**சிறு நெருஞ்சிக் காட்டுடே**
**நில்லென்று சொல்லி**
**நிறுத்தி வழி போனீரே."**

*சிறு குழந்தை இறந்த போது, பெற்ற தாய் பாடியது:*

**"ஈ கடிக்கச் சம்மதியோம்**
**எமன் வரச் சம்மதித்தோம்**
**காற்றடிக்கச் சம்மதியோம்**
**காலன் வரச் சம்மதித்தோம்"**

*விதியில் நம்பிக்கை இழந்து, தலைவி பாடும் பாட்டு இது:*

**"தாலிக்கு அரும்பெடுத்த**
**தட்டானும் கண்குருடோ?**
**சேலைக்கு நூலெடுத்த**
**சேணியனும் கண்குருடோ?**
**பஞ்சாங்கம் பார்க்க வந்த**
**பார்ப்பானும் கண் குருடோ?**
**எழுதினவன் தான் குருடோ?**
**எழுத்தாணி கூரிலையோ?"**

*- 'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 171.*

## 85. "லெட்சுமி போய்விட்டது! நான் அவள் தங்கை!"

வீடு கட்டிப் புதுமனை புகும்போது 'லெட்சுமி' என்ற பெயருடைய ஒரு பெண்ணை அழைப்பது மரபு. வீடு 'லெட்சுமி கடாட்சம்' நிறைந்திருக்க வேண்டும் என்ற ஆசையால் இவ்வாறு செய்வது வழக்கம்.

ஒரு புது மனை புகுவிழா, வீட்டுக்கார அம்மையார், 'லெட்சுமி' என்ற வேலைக்காரப் பெண்ணை அந்த நாளில் வீட்டுக்கு வரச் சொல்லியிருந்தார். லெட்சுமி அன்று எதிர்பாராத விதமாகப் பாட்டியினுடைய ஊருக்குச் செல்ல வேண்டியதாயிற்று. அவள் தன் தங்கையை அனுப்பியிருந் தாள். வீட்டுக்கார அம்மையார், 'லெட்சுமி உள்ளே வா' என்று ஆவலோடு அழைத்தாள். "லெட்சுமி போய்விட்டது! நான் அவள் தங்கை" என்று வந்தவள் சொன்னாள். புதுமனை புகும் நாளில், "லெட்சுமி போய்விட்டது" என்ற சொற்கள் காதில் விழுந்தால் யார்தான் வருத்தப்பட மாட்டார்கள்? அந்த வீடு ராசி இல்லாதது என்ற எண்ணம் பரவிவிட்டது.

*- 'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 41.*

## 86. யாருக்கு மோட்சம் கிடைக்கும்?

கும்பாபிஷேகத்தைப் பற்றி ஒரு சுவையான உரையாடல் உண்டு. கும்பாபிஷேகத்துக்குப் போனவனுக்கும் போகாமல் வீட்டில் இருந்தவனுக்கும் வாய்ச் சண்டை நடந்தது. யாருக்கு மோட்சம் கிடைக்கும் என்பது பற்றித்தான் இந்த வாக்கு வாதம் ஏற்பட்டது.

கும்பாபிஷேகத்திலிருந்து திரும்பி வந்தவன், "இறையருளைப் பெறும் அரிய வாய்ப்பை நீ இழந்து விட்டாயே?" என்று வீட்டில் இருந்தவனிடம் சொன்னான்.

அதற்கு அவன் என்ன பதில் சொன்னான் தெரியுமா? "என் உடம்பாகிய கட்டை தான் இங்கு இருந்தது. என் சிந்தனையெல்லாம் குடமுழுக்கு விழாவிலேயே இருந்தது. என் பிரார்த்தனை நிச்சயம் கடவுள் காதுகளில் விழுந்திருக்கும். அவர் எனக்கு அருள் வழங்குவார்... ஆனால் உன் நிலை என்ன? உன் உடல் உறுப்புக்கள் மட்டுமே அங்கே இருந்தன. 'கிராமம் முழுவதுமே வெளியேறியது போல, எல்லோரும் கும்பாபிஷேகத்திற்கு வந்துவிட்டார்களே? வீடு வாசல் எப்படி இருக்குமோ? திருட்டு நடந்திருக்குமோ, என்னவோ? சிறுகுழந்தைகளை வீட்டில் விட்டு வந்தோம்; அவர்கள் எவ்வாறு இருக்கிறார்களோ?' என்றெல்லாம் உன் மனத்தில் கவலைகள் ஊசலாடிய வண்ணமாக இருந்திருக்கும். அதனால், உனக்குக் கும்பாபிஷேகத்திற்குப் போயும் பலன் கிடைக்காது" என்று கூறினானாம்!

*- 'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 142.*

## 87. 'சிவா, சிவா!... கோவிந்தா, கோவிந்தா!'

வீர சைவன் ஒருவனும் வைணவத்தில் அளவு கடந்த ஈடுபாடு உடைய ஒருவனும் சந்தித்தார்கள்.

சைவனிடம் ஒரு பசு இருந்தது. பாத்திரத்தில் இருந்த பாலை, கறந்து முடிவதற்குள், அந்தப் பசு உதைத்துக் கொட்டிற்று. இது அந்தப் பசுவுக்கு அன்றாடப் பழக்கமாக ஆகிவிட்டது. ஆகையால் அதை விற்றுவிட அவன் முடிவு செய்தான்.

வைணவனிடம் ஒரு ஜோடி அடங்காத காளைகள் இருந்தன. அவற்றைப் பிடித்து வண்டியின் நுகத்தில் கட்ட இயலவில்லை. ஆகையால் அவன் அவற்றை விற்க விரும்பினான்.

எப்படியோ இருவரும் தங்களிடம் இருந்த கால்நடைகளை மாற்றிக் கொண்டார்கள். ஆறு மாதங்களுக்குப் பின்னர் அவர்கள் இருவரும் சந்தித்தனர். தங்களிடம் முன்னர் இருந்த கால்நடைகள், இடம் மாறிய பிறகு புதிய எஜமானரிடம் ஒழுங்காக இருக்கும் என்று இருவரும் நினைத்துக் கொண்டிருந்தார்கள். ஆனால்...

பசு எப்போதும் போல் பால் கறக்கும் பாத்திரத்தை எட்டி உதைத்தது. காளை மாடுகளின் குணமும் கடுகளவும் மாறவில்லை.

"உன்னுடைய காளைகளை வண்டியில் பூட்டினால் சிவா, சிவா. அதனால் இடது புறத்தில் பூட்டிய காளையை வலது பக்கமும், வலது பக்கத்தில் பூட்டியிருந்ததை இடது பக்கமாகவும் மாற்றினேன். அப்போதும், சிவா, சிவா!" என்று சைவன் சொன்னானாம்.

"உன்னடைய பசுவைப் பால் கறக்கப் போனால், கோவிந்தா, கோவிந்தா!" என்று வைணவன் சொன்னானாம்.

- *'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், பக். 149-150.*

## 88. ஆத்திகனும் நாத்திகனும்: ஓர் உரையாடல்

கடவுள் நம்பிக்கை நிறைந்த ஒருவனும், மூட நம்பிக்கை என்று கோயில்களை வெறுக்கும் பகுத்தறிவாளன் ஒருவனும் வெவ்வேறு திக்குகளில் சென்றனர்.

பக்தன் கோயிலுக்குச் சென்று இறைவனை வழிபட்ட பிறகு தன் தொழிலைக் கவனிக்கச் சென்றான். செல்லும் வழியில் ஒரு கல் குத்தி, சற்றுக் காயம் அடைந்தான். ஆனால் பகுத்தறிவாளன், அவன் சென்று கொண்டிருந்த வழியில் ஒரு ரூபாய் நோட்டைக் கண்டெடுத்தான். அவன் ஆஸ்திகனைச் சந்தித்த போது, "எனக்குக் கடவுள் நம்பிக்கை இல்லா விட்டாலும், நான் பணத்தைக் கண்டெடுத்தேன். நீ கல் கடவுளை நம்பினாய், காலில் கல் உன்னைக் குத்திவிட்டது" என்று சொன்னான்.

பக்தனுக்கு இதைக் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. உடனே விவரமாகவும் சுடச்சுடவும் பதில் சொன்னான். "என்னை இன்று நல்ல பாம்பு கடித்துக் கொன்றிருக்க வேண்டும். என்னுடைய தெய்வ நம்பிக்கை யாலும் கடவுளின் கருணையாலுமே நான் காப்பாற்றப்பட் டிருக்கிறேன். தலையோடு போக வேண்டியது தலைப்பாகை யோடு போனது போல, சிறிய காயத்துடன் தப்பிவிட்டேன். உன்னைப் போல அதிர்ஷ்டசாலிக்கு எவ்வளவோ பெரிய நன்மைகள் கிடைத்திருக்க வேண்டும். உன் பகுத்தறிவு உனக்கு ஒரு ரூபாயை மட்டுமே தந்திருக்கின்றது. கடவுள் நம்பிக்கை உனக்கு இருந்திருக்குமானால் இன்று உனக்கு ஒரு பெரும் புதையல் அல்லவா கிடைத்திருக்கும்?"

- *'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், பக். 150-151.*

## 89. மக்களைத் தேடிச் செல்லும் இறைவன்

பழங்காலத்தில், மக்கள் இறைவனைத் தேடிச் சென்ற போதிலும் இறைவனும் மக்களைத் தேடிச் சென்றதற்குத் திருவிழாக்கள் சான்றாக உள்ளன. கோயிலுக்குச் செல்ல இயலாத பக்தர்கள் பலர் இருந்தனர் - இருக்கின்றனர். முதிர்ந்த வயது, நடக்க இயலாமை, உடலுறுப்புக் குன்றியிருத்தல், நோய், தீட்டு, கீழ்ச்சாதி என்ற காரணத்தால் கோயிலுக்குள் விடப்படாதிருந்தது. இவை போன்ற நிலைகளில் இறைவனைத் தேடிச் செல்ல இயலாதவர்களுக்காக, இறைவன் தானே அவர்களைத் தேடிச் சென்றான்.

*- 'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 120.*

## 90. நம்பிக்கைகளும் சகுனங்களும் சாத்திரங்களும்

பிறப்பு முதல் இறப்பு வரை மனிதனின் ஒவ்வொரு நாள் வாழ்விலும், ஒவ்வொரு சிறு செயலிலும் கூட, எத்தனையோ நம்பிக்கைகள் சகுனங்கள் சாத்திரங்கள் மனிதனை ஆட்டிப் படைக்கின்றன. மெத்தப் படித்த மேதாவிகளும் பெருஞ் செல்வர்களும் அதிகாரத்தின் உச்சியில் உட்கார்ந்திருப்பவர்களும் சில சமயம் இவற்றை அலட்சியப்படுத்துவார்கள்; பிறகு அடுத்தடுத்து அவர்களுக்கு ஏதாவது தொல்லைகள் ஏற்படும். அவற்றுக்கு அறிவின் அடிப்படையில் ஆராய்ந்து காரணம் காட்ட முடியாது. கடைசியாக, அவர்களும் பாமரர்கள் போல இந்த நம்பிக்கைகளுக்கும் சகுனங்களுக்கும் சாத்திரங்களுக்கும் அடிமை ஆகிவிடுவார்கள். அப்போது அவர்கள் இந்தச் சடங்குகளில் காட்டும் வேகம், பாமரர்களின் ஈடுபாட்டைப் போலப் பன்மடங்காக மிளிரும்.

*- 'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப. 64.*

## 91. பட்டிக்காட்டான் பார்வையில் பட்டினம்

பட்டிக்காட்டான் ஒருவன் பட்டினத்தைப் பார்த்துக் கொண்டே போனான். பெரிய பெரிய வீடுகள் இருந்தன. அவற்றின் பெயரும் அவற்றின் சொந்தக்காரர்களின் பெயரும் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்தன. அரைகுறையாக ஆங்கிலம் படித்தவன் ஒருவனைத் துணைக்கு அழைத்துச் சென்றான். 'இது யார் வீடு? அது யார் வீடு' என்று வினவினான். வாடகைக்கு விடக் கூடிய காலியாக இருந்த வீடுகளில் 'To let' (வாடகைக்கு விடப்படும்) என்றும், விற்பனைக்கு உரிய வீடுகளில் 'For sale' (இந்த வீடு விற்கப்படும்) என்றும் பலகைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. அறைகுறைப் படிப்புக்காரன் இது 'பார் சேல்' துரை வீடு, இது 'டு லெட்' துரை பங்களா என்று சொல்லிக் கொண்டு போனான். 'பார் சேல்' துரையை விட 'டு லெட்' துரை தான் பெரிய பணக்காரனாக இருப்பான் போலிருக்கிறது என்று பட்டிக்காட்டான் நினைத்தான்.

- *'சோமலெ', தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், பக். 151-152.*

7

## நகைச்சுவை உலா



### 92. நகைச்சுவையின் இன்றியமையாமை

"நகைச்சுவை, வாழ்க்கையை வாழ்வாங்கு வாழ விரும்பும் எல்லோருக்கும் இன்றியமையாததாகும்."

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், ப.93.*

## 93. கல்கியின் நகைச்சுவை

**க**ல்கியின் எழுத்துக்களில் நகைச்சுவை மிகுதியாக யிருந்தது. ஆனால் அந்த நகைச்சுவை பிறருடைய மனத்தைப் புண்படுத்துகின்ற நகைச்சுவையாக விளங்கியதில்லை. மாற்றுக் கட்சியாரையும் அவருடைய நகைச்சுவை சிரிக்கச் செய்தது. மேலும் அவர் நகைச்சுவையாக எழுதியதெல்லாம் வாழ்க்கையில் அவருக்கிருந்த நிறைந்த அனுபவத்தின் வாயிலாக அவருக்குத் தோன்றிய சில கருத்துக்களேயாகும். நகைச்சுவையான கட்டுரைகளை எழுதிய போதுங்கூட அவருடைய அறிவும் ஆராய்ச்சியும் அந்தக் கட்டுரைகளுக்குச் சிறப்பையும் பெருமையையும் தந்தன.

*-'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், ப.64.*

## 94. 'உயர்திரு கல்கி. கிருஷ்ணமூர்த்தி'

**எ**ழுத்துத் துறையில் ஈடுஇணையற்று விளங்கியது போலவே கல்கி சிறந்த பேச்சாளராகவும் திகழ்ந்தார். அவருடைய பேச்சில் நகைச்சுவை மிகுதியாக இருக்கும். மேடைப் பேச்சில் மட்டுமன்று, நண்பர்களோடு வீட்டில் பேசிக் கொண்டிருக்கும் போதும் அப்படித்தான். அவருடன் நகைச்சுவை இயற்கையாகவே இரண்டறக் கலந்திருந்தது. ஒரு தடவை அவருக்குக் கொடுக்கப்பட்ட வரவேற்புப் பத்திரத்தில் **உயர்திரு கல்கி. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு** என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதற்கு அவர் பதில் சொல்லும் போது "என்னை இதற்கு முன் நீங்கள் பார்த்திருந் தால் 'உயர்திரு' என்று குறிப்பிட்டிருக்க மாட்டீர்கள். 'திரு' என்று மட்டும் குறிப்பிட்டிருப்பீர்கள்" என்று வேடிக்கை யாகச் சொன்னார்.

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், ப.70.*

## 95. 'ஒரு பெண்மணியாகக் கூட இல்லையே?'

ஒரு கூட்டத்தில் டி.கே.சி., ம.பொ.சி., கல்கி மூவரும் பேசினர். பேச்சாளரை அறிமுகப்படுத்திய அன்பர் "மும்மணி கள் இன்று பேசுவார்கள்" என்று சொன்னார். அதைப் பற்றிக் கல்கி குறிப்பிட்டது வேடிக்கையாக இருந்தது. "டி.கே.சி. ரசிகமணி; ம.பொ.சி. கிராமணி; நான் மூன்றாவது மணியாக இருக்க ஒரு பெண்மணியாகக் கூட இல்லையே" என்று கல்கி கூறினார்.

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், ப.71.*

## 96. ஏ.கே. செட்டியாரின் நகைச்சுவை

திரு. ஏ.கே. செட்டியார் 'உலகம் சுற்றும் தமிழன்'; 'பிரயாணக் கட்டுரைகள்', 'ஜப்பான்', 'மலேயா முதல் கனடா வரை', 'அமெரிக்க நாட்டில்', 'கயானாவும் கரிபியன் கடலும்', 'ஐரோப்பா வழியாக' என்ற நூல்களின் வாயிலாகத் தமிழ்நாட்டில் பிரயாணக் கட்டுரைகளைப் படிப்பதில் வாசகர்களுக்கு ஓர் ஆர்வத்தை உண்டாக்கினார். இந்த நூல்கள் வாயிலாகத் தமிழ் மக்களுக்கு உலகத்தைப் படம்பிடித்துக் காட்டினார். இவர் நகைச்சுவையோடு எழுதும் இயல்புள்ளவர். எடுத்துக்காட்டாக, இத்தாலியைப் பற்றி இவர் எழுதியிருப்பதாவது:-

"மார்கோனியும் மக்ரோனியும் பிறந்தது அந்த நாட்டில் தான். மார்க்கோனியை உங்களுக்குத் தெரியும். அவர் காலஞ்சென்ற ஒரு விஞ்ஞான நிபுணர். மக்ரோனி என்பது ஓர் உணவுப் பொருள் (Macaroni: A Popular Italian Food). இத்தாலியர் ஏழை முதல் பணக்காரர் வரையில் தினந்தோறும் விரும்பி யுண்ணும் உணவு."

*- 'சோமலெ', பிரயாண இலக்கியம், பக். 15-17.*

## 97. சர் சி.வி. ராமனின் நகைச்சுவை

***1948***-இல் பிரான்சில் நடைபெற்ற விஞ்ஞான மாநாட்டுக்கு நம் நாட்டிலிருந்து பேரறிஞர் சர் சி.வி.ராமன் சென்றிருந்தார். அப்போது நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியை, "ராமன் விளைவு (Raman Effect) என்பது மதுவை எப்படி மாற்றுகிறது என்பதை அறிந்த பிரெஞ்சு விஞ்ஞானிகள் மதுவானது ராமனை எப்படி மாற்றுகிறது என்பதையும் அறிய முயன்றனர்" என்று அவர் நகைச்சுவை தோன்றக் கூறியுள்ளார்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், என் பிரயாண நினைவுகள், ப.8.*

## 98. தாகூரின் நகைச்சுவை

**யா**ழ்ப்பாணம் மாம்பழத்திற்குப் பெயர் பெற்றது... பல ஆண்டுகளுக்கு முன்னர், கவி ரவீந்திரநாத தாகூர் யாழ்ப்பாணத்திற்கு வந்திருந்த பொழுது, யாழ்ப்பாணக் கல்லூரி ஆசிரியர் சிலர் அவருக்கு ஒரு கூடை மாம்பழம் கொடுத்தார்களாம். "இது என்ன மாம்பழம்?" என்று கவிஞர் கேட்டதற்கு, "கொழும்பு மாம்பழம்" என்று ஆசிரியர்கள் சொன்னார்களாம். அதற்குக் கவிஞர், "கொழும்பிலும் இதே மாம்பழத்தைத் தான் எனக்குத் தந்தார்கள். யாழ்ப்பாணம் மாம்பழம் என்று அங்கே பெயர் சொன்னார்கள். பாவம், இந்த மாம்பழத்தைத் தமது என்று சொல்லுவார் ஒருவரும் இல்லை போலும்" என்று பரிதாபப்பட்டாராம். மறுநாளும் ஆசிரியர்கள் கவிஞருக்கு ஒரு கூடை நிறைய மாம்பழம் அனுப்பினார்களாம். அப்போது கவிஞர் "நீங்கள் நிறையப் பழமாகத் தருகிறீர்களே?" என்றும், "நான் இங்கே தங்கியிருப்பதால் நல்ல பலன் கிடைத்துவிட்டது" என்றும் இரு பொருள் நயம்பட, "You are making my stay fruitful" என்று நகைச்சுவையுடன் கூறினாராம்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், நமது தலைநகரம், பக். 93-94.*

## 99. 'நான் அக்பருக்குத்தான் வேலைக்காரன்!'

மொகலாயப் பேரரசரான அக்பருக்கு முருங்கைக்காய் மீது மிகுதியான விருப்பமிருந்ததாம். அவர் ஒருநாள் முருங்கைக்காயின் சுவை, சத்து, மணம், குணம் ஆகியவற்றைப் புகழ்ந்தாராம். அதைக் கேட்ட அவருடைய மந்திரி ஒருவர், "ஆம் அரசரே, முருங்கைக்கு இணையான காய்கறி உலகில் எங்கே இருக்கிறது?" என்று கூறினாராம். சில மாதங்களுக்குப் பின்னர் அக்பர் முருங்கைக் காயைப் பற்றிக் குறைவாகச் சொன்னாராம். அப்போது அந்த மந்திரி, "ஆம் அரசே, இந்தக் காய் உடலுக்குத் தீமை விளைவிக்கக் கூடியது" என்றாராம். "முன்னொரு முறை இதற்கு மாறுபட்ட கருத்தைத் தெரிவித்தீர்களே?" என்று அக்பர் கேட்ட பொழுது, "நான் முரணான கருத்துக்களைச் சொன்னது உண்மைதான். நான் அக்பருக்குத் தான் வேலைக்காரன், முருங்கைக் காய்க்கு வேலைக்காரன் அல்லவே?" என்று கூறினாராம்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், நமது தலைநகரம், ப.96.*

## 100. 'சர்க்கரை இல்லாத காப்பி'

'சர்க்கரையில்லாத காப்பி' என்றதும் 'ஆனந்த விகடன்' இதழ் ஒன்றில் படித்த ஒரு நிகழ்ச்சி எனக்கு நினைவுக்கு வருகிறது:

ஒருவர் ஒரு சிற்றுண்டிச் சாலைக்குச் சென்று பாதாம் அல்வா, ஜாங்கிரி, ஐஸ் கிரீம், இன்னும் சில இனிப்புக்களை உட்கொண்டாராம். அதன் பிறகு காப்பி கொண்டு வரட்டுமா என்று அங்குள்ள வேலையாள் ஒருவர் கேட்ட போது, அவர் அவசரமாக, "காப்பியில் சர்க்கரை போடக்கூடாது, டாக்டர் கண்டிப்பாய்ச் சொல்லியிருக்கிறார்" என்று கூறினாராம்.

*- 'சோமலெ', நான் கண்ட விழாக்கள், ப. 49.*

## 101. 'இடியாப்பச் சிக்கல்!'

திருநெல்வேலி மாவட்டத்தில் இட்டிலியும், தோசையும், கீரையும், புளிக்குழம்பும் சிறப்பாக இருக்கும். மலையாள நாடு மோர்க்குழம்புக்கும், அவியலுக்கும், மிளகு ரசத்துக்கும், சக்கைப் பிரணாம் என்னும் பலாச்சுளைப் பாயசத்திற்கும் புகழ்பெற்றது. சென்னை நகரம் சாம்பாருக்கும், பஞ்சாபு 'லஸி' என்னும் மோருக்கும் புகழ் பெற்றது. இவற்றைப் போலவே யாழ்ப்பாணத்திற்குச் சிறப்பான உணவு இடியாப்பம். இடியாப்பத்தைப் பற்றிச் சுவையான கதையொன்று உண்டு:

புதிதாக யாழ்ப்பாணத்திற்கு வந்த ஒருவர் ஒரு சிற்றுண்டிச் சாலைக்குச் சென்று ஏதாவது உணவு கொடுக்கச் சொன்னாராம். அங்குள்ள ஆள் இடியாப்பத்தைக் கொண்டு வந்து வைத்ததும், அவருக்குக் கோபம் வந்துவிட்டதாம். "என்ன ஐயா, அவசரமாகக் கோர்ட்டுக்குப் போக வேண்டு மென்று சொல்லுகிறேன். இதைக் கொண்டு வந்து வைத்திருக் கிறீர்களே, முழுவதும் சிக்கலாக இருக்கிறது. இவ்வளவு சிக்கலையும் எப்பொழுது எடுப்பது?" என்று சொன்னாராம்!

யாழ்ப்பாணத்தில் நடைபெற்ற தமிழ் விழாவிற்கு விஞ்ஞானி சர்.கே.எஸ். கிருஷ்ணன் வந்திருந்தார். இடியாப்பம் செய்யும் முறையை அவர் அறிய முயன்றாராம். அதை அறிந்த யாழ்ப்பாணத்தார், "விஞ்ஞானச் சிக்கலைத் தீர்த்து விடுகிறவர்களுக்கு இடியாப்பச் சிக்கலை எடுக்க முடியாதா?" என்று சொல்லித் தம் வியப்பைத் தெரிவித்தார்கள்.

*- 'சோமலெ', இலக்குமணச் செட்டியார், நமது தலைநகரம், பக். 92-93.*

## 102. 'எல்லோருக்கும் நல்ல காலம் உண்டு!'

சென்னை நகரக் காட்சி ஒன்று: உயர்நீதி மன்றக் கட்டிடத்து ஓரத்தில் சைனா பசார் நடைபாதையில் சோதிடர்க்கும் கைரேகை பார்ப்பவர்க்கும் குறைவில்லை. அவர்களிடம் போய்க் கேட்கும் ஒவ்வொருவரிடமும், "உங்களுக்குப் பெரிய யோகம் இருக்கிறது" என்று சொல்லுவார்கள். "ஐயா, சாதகம் பார்க்கிறவர்கள் எல்லோருமே இப்படித்தான் சொல்லுகிறார்கள். ஆனால், ஒன்றையும் தான் காணோம்" என்று கைகாட்டுபவர் ஒருவர் கேட்டார். அதற்குச் சோதிடர் சொன்னார்: "சுக்கிர திசை அடித்துவிட்டால் நொடிப்பொழுதில் பெரும்பொருள் கிட்டும். கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டும் கொடுக்கும். உங்களுக்குக் கிண்டி ரேசில் பணம் கிடைக்கலாம். அல்லது மலேயா லாட்டரிச் சீட்டு விழும். இந்திய அரசாங்கத்துப் பரிசுப் பத்திரத்திலும் பணம் வரலாம். தூத்துக்குடி முத்துக்குளிப்பு ஏலம் எடுத்தால் உங்கள் கையில் சிக்கும் சிப்பியில் விலை உயர்ந்த முத்து இருக்கும். இவை எல்லாம் இல்லாவிட்டாலும், சாமுத்திரிகா லட்சணப்படி இந்தச் சாதகனுக்கு வேறு யாராவது ஒருவருடைய சொத்து வந்து சேரும்" என்று கடைசியாக ஒரு 'போடு' போட்டதும் கேட்பவர் அயர்ந்தே போவார்.

"உங்களிடம் வரும் எல்லோருக்கும் இப்படித் தானே சொல்லுகிறீர்கள்?" என்று ஒருவன் அந்தச் சோதிடனை ஒருநாள் கேட்டான். "ஆம், அது உண்மைதான். எல்லோருக்கும் நல்ல காலம் உண்டு. அது வரும் வரை பொறுத்திராமல், மக்கள் பதட்டப்படுகிறார்கள், அவ்வளவு தான்!' என்றார் சோதிடர்.

*- 'சோமலெ', உலக நாடுகள் வரிசை-3: குவாயிட், ப.8.*

## 103. பணத்திற்குக் கொடுக்கப்படும் அளவு கடந்த மதிப்பு

நம் நாட்டு மக்களிடம் நான் கண்ட பெரிய குறைபாடு பணத்திற்குக் கொடுக்கப்படும் அளவு கடந்த மதிப்பு. வெளிநாடுகளில் ஒருவர் மற்றொருவரைத் தனிமனிதராக, அறிவும் குணமும் ஆற்றலும் படைத்தவராக நினைக்கிறார். அவர் பெயரில் பாங்கில் எவ்வளவு பணம் இருக்கிறது என்பதைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. நம் நாட்டில் ஒருவருடைய பொருள் நிலையைத் தவிர வேறு எதைப் பற்றியும் யாரும் சிந்திப்பதில்லை. இதற்கு ஒரு விளக்கம் கூறுகிறேன். இது வேடிக்கைக் கதையல்ல, நடந்த நிகழ்ச்சி:

சில ஆண்டுகளுக்கு முன் சென்னை உயர்நீதி மன்றத்தில் கடலைக் கொட்டை ஏற்றுமதி செய்யும் ஒரு பெரிய குழுவின் பொறுப்பாளராக இருந்த ஒரு வெள்ளைக்காரர் மீது ஒரு வழக்கு நடைபெற்றது. எதிர்க்கட்சி வழக்குரைஞர், துரையை "உங்களுக்கு எவ்வளவு சம்பளம்?" என்று கேட்டார். துரைக்கு 1,000 அல்லது 1,500 -ரூபாய் சம்பளம் இருக்கும் என்று வழக்குரைஞர் நினைத்தார். துரை ரூ. 3,000- என்று சொல்ல வாயைத் திறந்ததும் வழக்குரைஞர் அந்தத் தொகையைக் கேட்ட அளவிலேயே பயந்து போனார். "ரூ. 3,000-ம் என்னுடைய கம்பெனியின் லாபத்தில் ரூ.100-க்கு 50 நயா பைசா வீதம் (Half of one percent) லாபப் பங்கும் உண்டு; இவ்வாறு என் பங்குக்குக் கிடைக்கும் லாபத் தொகை ஓர் ஆண்டுக்கு இலட்சம் ரூபாய்" என்று மேலும் துரை சொன்னாராம். உடனே நீதிபதிக்கு ஒன்றும் புரியவில்லை. நீதிமன்றத்து வேலையாட்களைக் கூப்பிட்டு "அவர் உட்காரு வதற்கு முதலில் நாற்காலி போடுங்கள், குறுக்கு விசாரணை யைப் பிறகு தொடர்ந்து நடத்தலாம்" என்று சொன்னார். நீதிமன்றங்களில் கூட செல்வர்களுக்கு இவ்வளவு மதிப்பு இருக்கிறது. என்று இந்த நிலை மாறுமோ அப்போது தான் நம் நாட்டில் உண்மையான முன்னேற்றத்தை எதிர் பார்க்கலாம்.

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், பக்.129-130.*

## 104. ஆஸ்திரேலியரின் நகைச்சுவை உணர்ச்சி

● *ஆஸ்திரேலியர் நகைச்சுவை படைத்தவர்கள். இவ்விஷயத்தில் இவர்கள் பிரிட்டிஷாருக்கு முற்றிலும் மாறுபட்டவர்கள். ஒருநாள், ஏதோ நினைவில், ஆஸ்திரேலியர் சிலரிடம் நான் தமிழில் பேசியபோது, அவர்களும் என்னுடன் சேர்ந்து சிரித்தனர். ஜெர்மானியராகவோ, பிரிட்டிஷாராகவோ இருந்திருந்தால் நான் அவர்களை அவமதித்ததாகவே கருதுவர்.*

● **வே**தாந்த மனப்பான்மையாலும் வாழ்க்கைத் துயரங் களாலும் அல்லற்படும் நாம், நகைச்சுவை உணர்ச்சியை வளர்க்க வேண்டும். அதுவே இன்பத்துக்கு மணம் தந்து, துன்பத்துக்குச் சுவையூட்டும் ஊறுகாய். "இடுக்கண் வருங்கால் நகுக" என்பது தமிழ் மறையன்றோ!

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், ப.37.*

## 105. 'இதோ, புறப்பட வேண்டியது தான்!'

ஆஸ்திரேலியப் பெண்களும், உலகின் மற்ற தேசத்துப் பெண்களைப் போலவே, குடும்ப வாழ்வில் எந்த வேலையை யும் ஆமை வேகத்தில் செய்வர். 'உம்' என்றால் நான்கு மணி நேரம் ஆகிவிடும். இதோ ஓர் ஆஸ்திரேலியத் துணுக்கு:-

**கணவன்:** என்ன நேரமாகிறதே, புறப்படலாமா? சினிமா தொடங்கியிருப்பார்களே?

**மனைவி:** ஒன்றும் நேரமாகாது. இதோ வந்துவிட்டேன். முகத்தைக் கழுவிப் பவுடர் போட்டுக் கொண்டு, நகத்தை வெட்டி, பூட்சைப் பாலிஷ் செய்து, புது உடை அணிந்து புறப்பட வேண்டியதுதான்!

*- 'சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், ப. 46.*

## 106. ஓர் ஆஸ்திரேலியத் துணுக்கு

வயதான ஒருவர் ஒரு பத்திரிகையின் அலுவலகத்துக்கு வந்தார்.

வந்தவர்: என் தம்பி இறந்து விட்டான். அதைப் பத்திரிகையில் போட என்ன ஆகும்?

பத்திரிகைக்காரர்: அங்குலத்திற்கு 3 சில்லிங்.

வந்தவர்: அடேயப்பா! அவன் 6 ½ அடி உயரம் இருந்தானே!

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், ஆஸ்திரேலியாவில் ஒரு மாதம், ப. 100.*

## 107. அமெரிக்கரின் பார்வையில் இட்டிலி

இந்தியாவில் சில காலம் தங்கிய ஓர் அமெரிக்கர் "இட்டிலி என்பது ஒரு சிறந்த சிற்றுண்டி. சாம்பார் என்னும் கடலில், இட்டிலி ஒரு நீர்மூழ்கி போல ஒளிந்து கொண்டிருக்கிறது" என்று ஓர் அமெரிக்கப் பத்திரிகையில் எழுதியிருந்தார். இங்கு,

"இட்டிலி யென்பது இனியஉணா; மற்றதனை
ஒட்டி நுகர்வது சாம் பார்"

என்னும் கேலிப் பாடல் நினைவில் வருகின்றது. இட்டிலியைப் போலவே, அப்பளமும் இந்தியாவில் தயாரிக்கப்படும் காப்பியும் பெயர் பெற்றவை. ஆகையால், அமெரிக்காவில் இவை கிடைக்க ஏற்பாடு செய்வது, நம் அரசியலாரின் டாலர் பற்றாக்குறையைச் சரிக்கட்ட எளிதான, அனுபவ சாத்திய மான, உடனே பலன் தரத்தக்க வழியாகும்.

*- சோம.லெ. இலக்குமணச் செட்டியார், அமெரிக்காவைப் பார்!, ப. 177.*

## 108. பிரெஞ்சு நகைச்சுவைத் துணுக்குகள்

பிரெஞ்சு நகைச்சுவைத் துணுக்குகள் காதலைப் பற்றியே இருக்கும். இதோ இரண்டு:

● பாரிஸ் நகரச் சாலைகளில் எண்ணற்ற கார்கள் எந்த நேரமும் சென்று கொண்டிருக்கும். அந்நகரில் யாராவது தம் மனைவியிடம் காரைக் கொடுத்து ஓட்டச் சொன்னால், ஒன்று அவன் ஒரு புதுக்கார் வாங்க ஆசைப்படலாம்; அல்லது புதிய மனைவி ஒருத்தியை அடைய அவன் திட்டமிட்டிருக்கலாம்.

● சிறுகதை ஆசிரியரான மொபசான் காதலித்த ஒரு பெண்ணை பாரிஸ் நகரத்து மருத்துவர் ஒருவரும் காதலித்தார். மூவரும் ஒரு நாடகக் கொட்டகையில் சந்தித்தனர். "இப்பேரழகி தங்கள் அசட்டு உரையைக் கேட்டுக் கேட்டு நோயுறும் போது, நான் இவளைக் காப்பாற்றுகிறேன்!" என்றார் மருத்துவர். "நீங்கள் கொடுக்கும் மருந்தைத் தின்று தின்று இவள் சாகும் தருவாயில் இருக்கும்போது, நான் என் கற்பனைகளால் இவளை வாழ வைக்கிறேன்!" என்றார் கதை ஆசிரியர்.

- *'சோமலெ', உலக நாடுகள் வரிசை-5: பிரான்ஸ், பக். 15-16.*

## 109. கடவுளுக்கு ஒரு கடிதம்

எகிப்தின் தலையாய தொழில் பயிர்த் தொழிலே. எகிப்திய உழவருக்கு பெலா என்று பெயர். பெலா கடுமையாக உழைக்கும் இயல்பினர்.

ஒரு பெலா கெய்ரோ நகருக்கு வந்து செலவுக்குப் போதிய பணம் இன்றிக் கடன் வாங்கினான். 500 பவுன் இனாமாகத் தரவேண்டுமென்று கடவுளுக்கு ஒரு கடிதம் எழுதித் தபாலில் போட்டான். அஞ்சல் நிலைய அலுவலர் ஒருவர், இந்த வேடிக்கையான கடிதத்தை மன்னருக்கு அனுப்பி வைத்தார். மன்னர் கடிதத்தைப் படித்துச் சிரித்து விட்டு, 250 பவுன் அந்த பெலாவுக்கு அனுப்பும்படி அரண்மனை அலுவலரிடம் கூறினாராம். சில மாதங்களுக்குப் பின்னர் அந்த பெலா மறுபடியும் கடவுளுக்கு ஒரு கடிதம் எழுதினான். அது வருமாறு:-

"ஈவு இரக்கமுள்ள கடவுளே! போன தடவை 250 பவுன்தான் அனுப்பினீர்கள். இப்போது எனக்கு 400 பவுன் வேண்டும். ஆனால் அதை பரூக் மன்னரின் அரண்மனை வாயிலாக அனுப்பாதீர்கள். அவர்கள் தங்களுடைய அன்புக் காணிக்கையில் கூடப் பாதிப் பணத்தை வரிப் பணமாக எடுத்துக்கொண்டு விடுகிறார்கள்."

*- 'சோமலெ', ஆப்பிரிக்க நாடுகள் வரிசை-2 (ஐக்கிய அரபுக் குடியரசு எகிப்து), பக் 28-29.*

## 110. தூதுவரின் சாதுரியமான பதில்

*பிரேசில் என்னும் தென்அமெரிக்க நாட்டின் தூதுவராக டாக்டர் ஆரன்ஹா என்பவர் அமெரிக்காவில் பணியாற்றினார். ஒரு தடவை ஓர் அமெரிக்க அம்மையார் ஆரன்ஹாவை, "தூதுவர் அவர்களே, உங்களுடைய நாட்டிலே என்ன உற்பத்தியாகிறது?" என்று கேட்டாராம். அதற்கு ஆரன்ஹா, அந்த அம்மையாரைப் பார்த்து, தலைவணங்கி, மரியாதை செலுத்தி, "தங்களைப் போன்ற எழில்மிக்க அழகிகளுக்குத் தேவைப்படும் வைரக் கற்கள், மணம் நிறைந்த மலர்கள், இவை எங்கள் நாட்டிலே கிடைக்கின்றன!" என்று சொன்னாராம். தன்னை 'ரதி' என்று சொல்லி விட்டால் எந்தப் பெண்ணுக்குத் தான் மனம் மகிழ்ச்சியாய் இராது?*

*- 'சோமலெ', நீங்களும் தூதுவர் ஆகலாம், ப. 123.*

## 111. 'நேற்று வரவேண்டிய வண்டி'

*செக்கோசுலோவகியா ரயில்களும் இந்திய ரயில்களும் காலம் தாழ்த்துத்தான் உரிய இடங்களுக்குப் போய்ச் சேருமென்று சொல்லுவதுண்டு. ஒரு தடவை ஒரு வண்டி குறித்த நேரத்தில் ஒரு நிலையத்தை அடைந்தபோது "இந்த வண்டி நேற்று வரவேண்டியது; இது சரியாக 24 மணி நேரம் தாமதித்து வந்திருக்கிறது" என்று நிலைய அதிகாரி சொன்னதாக வேடிக்கையாகக் கூறுவர்.*

*- 'சோமலெ', நான் கண்ட விழாக்கள், ப. 42.*

## 112. 'தமிழ் அருவி!'

குற்றால அருவி தமிழர்க்குச் சிறப்பாக உரியது. அருவி என்பதற்கு ஏற்ற ஆங்கிலச் சொல் 'வாட்டர் பால்ஸ்' என்பது. ஆங்கிலம் படித்த தமிழர் சிலர், அறிவுச் செல்வத்தை யெல்லாம் அந்த மொழியின் வாயிலாகவே பெற்று வருகின்றனர்; எனவே, தமிழ் மொழியில் இனிய சொற்கள் இருப்பதும், அவற்றில் சில சொற்கள் வழக்கொழிந்திருப்ப தும் அவர்களுக்குத் தெரியாது. ஆகையால் அவர்கள் 'வாட்டர் பால்ஸ்' என்ற ஆங்கிலச் சொல்லை 'வாட்டர்-நீர்', 'பால்ஸ்-வீழ்ச்சி' என்று சொல்லுக்குச் சொல் மொழி பெயர்த்து, 'நீர்வீழ்ச்சி' என்ற புதுத்தொடரை ஆக்கியுள்ள னர். அருவி என்ற சொல், சங்க இலக்கியங்களில் பயன் படுத்தப் பெற்றிருக்கிறது; இன்றும், பல இடங்களில் வழங்கி வருவது. 'நீர்வீழ்ச்சி' என்னும் சொல்லில், தமிழ் மொழியின் வீழ்ச்சியைத் தான் காணுகின்றோம்; ஆறு எழுத்துக்கள் உள்ள இந்தச் சொல்லில், மூன்று எழுத்துக்களைக் கொண்ட 'அருவி' என்னும் சொல்லில் உள்ள பொருள் ஆழத்தையோ, தெளிவையோ, தண்மையையோ, ஓசை இனிமையையோ கண்டோமில்லை. எனவே, குற்றால அருவி, தமிழ் அருவி என்பதையும், 'அருவி' என்பது தூய தமிழ்ச் சொல் என்பதையும் மீண்டும் ஒருமுறை தெரிவிக்க விரும்புகிறேன்.

*- 'சோமலெ', பிரயாணம் ஒரு கலை, ப. 57.*

## 113. 'சோறு தொண்டையில் விக்கும்!'

பேசுவது போல எழுதுவதும், எழுதுவது போலப் பேசுவதும் தவறான முறைகளாகும். இதற்குச் சான்றாகச் சோமலெ சுட்டிக்காட்டும் ஒரு சுவையான நிகழ்ச்சி:

"யாழ்ப்பாணத்தில் இருந்து தமிழகத்துக்கு வந்ததும் ஒரு புலவர், தனுசுகோடி ரயில் நிலையத்தில் தாம் சந்தித்த ஒரு வழிப்போக்கரை,

**'சோறு எங்கே விற்கும்?'** என்று கேட்டாராம். அதற்கு அவர்,

**'சோறு தொண்டையில் விக்கும்'** என்று மறுமொழி கூறினாராம்!"

- *'சோமலெ', வளரும் தமிழ், ப. 173.*

## 114. சந்திகளைப் பிரித்து எழுதுவதில் எழும் சங்கடங்கள்

*சொற்களைச் சந்தி கூட்டி எழுதுவதே தமிழ் மரபு. எனினும், ஓரளவே படித்தவர்களும் பொருளைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தால் மறுமலர்ச்சி எழுத்தாளர்கள் பிரிக்கக்கூடாத இடங்களிலும் சந்திகளைப் பிரித்து எழுதி வருகிறார்கள். வேறு சிலர் சில எழுத்துக்களுக் கிடையே இடம் விட்டு எழுதுவர். பிரிக்கக்கூடாத இடங்களில் சந்திகளைப் பிரித்து எழுதுவதால் பொருள் எவ்வளவு மாறுபடுகிறது என்பதற்குச் சோமலெ காட்டும் சில சுவையான சான்றுகள்:*

1. "பிராமணர்கள் சாப்பிடுமிடம்"
   "பிராமணர் கள் சாப்பிடுமிடம்"
2. "அந் நியமனம்"
   "அந்நிய மனம்"
3. "நல்ல திட்டம்"
   "நல் லதிட்டம்" (நல்+அதிர்ஷ்டம்)
4. "சமஸ்தானம்" (தனி அரசு)
   "சம ஸ்தானம்" (சமமான இடம்)
5. "செவ்வாய்" – செவ்வாய்க்கிழமை
   "செவ் வாய்" – சிவந்த வாய்
6. "தலைவிதிவசம் – தலை+விதி+வசம் (தலைவிதிப்படி)
   தலைவி+திவசம் (மனைவியினது திவசம்)

வந்த தாய், அந்த மான்
அம் மணம், பல கைகள்

*என்ற சொற்கள் பிரித்து எழுதினால் ஒரு பொருளையும் சேர்த்து எழுதினால் பிறிதொரு பொருளையும் தருகின்றன."*

*-'சோமலெ', வளரும் தமிழ், பக். 183-184.*

## 115. மணமகளா? பெண் பன்றியா?

*திரு., திருமதி., திருவாட்டி என்ற தமிழ்ச் சொற்களிருக்க, பலர் திருமண அழைப்பிதழ்களில் சிரஞ்சீவி, சௌபாக்கிய வதி என்ற வடசொற்களைப் பயன்படுத்தி வருகின்றனர். அச்சொற்களைக் குறிப்பதற்காகச் சுருக்கமாக, சி.சௌ. எனத் தமிழிலும், Chi, Sow என்று ஆங்கிலத்திலும் எழுதி வருகின்றனர். இவ்வாறு எழுதி வருபவர்கள் Sow என்று ஆங்கிலத்தில் ஒரு சொல் இருப்பதையும், அச்சொல்லுக்குப் பெண் பன்றி என்று பொருள் இருப்பதையும் அறியார் போலும். இத்தகைய தவறுகளை நீக்கவேனும் தமிழ்ச் சொற்களைப் பயன்படுத்துவார்களாக!*

*கோருகிறோம் என்பதற்குத் தவறாகக் கோறுகிறோம் என்று பலர் அச்சிட்டு வருகின்றனர். கோறுகிறோம் என்பதற்குப் பொருள் 'கொல்கிறோம்' என்பதை இவர்கள் அறியவில்லை போலும்!*

*- 'சோமலெ', வளரும் தமிழ், ப. 113.*

## 116. பேச்சு வழக்கில் தமிழ்

*பேச்சு மொழிக்கும், எழுத்து மொழிக்கும் வேறுபாடு மிகுதி. பேசுவது போல் எழுதுவதும், எழுதுவது போலப் பேசுவதும் தவறான முறை; பேசுவது போல் எழுத வேண்டுமென்ற இயக்கம் பிற மொழிகளிலும் வெற்றி பெறவில்லை...*

*பேச்சு வழக்கில் தமிழ் மொழி பல இடங்களில் பல வகையாகப் பேசப்பட்டு வருகிறது.... ஒரு கருத்தைத் தெரிவிக்க, பல மாவட்டங்களில் பல சொற்களைப் பயன்படுத்து கிறார்கள். **பெண் பூப்பு எய்திவிட்டாள்** என்பது நெல்லை வழக்கு. **மேஜராகிவிட்டாள்** என்று சொல்வது நாகரிக வழக்கு. **மனுசியாகிவிட்டாள்** என்று சொல்வோரும் உளர். **ருது ஆகிவிட்டாள்** என்ற சொற்றொடர்களையும் கேள்விப்பட்டிருக்கிறோம். **ஆளாகிவிட்டாள்** என்ற வழக்கும் உண்டு. **சடங்காகி விட்டாள்** என்று செட்டிநாட்டில் சொல்வர். **பெண் பெரியவளாகி விட்டாள்** என்பர் பலர். **புஷ்பவதியாகி விட்டாள்** என்பர் சிலர். **சமைந்துவிட்டாள்** என்பர் தென்னார்க்காட்டு மக்கள்; **புத்தி அடைந்துவிட்டாள்** என்று அவர்கள் சொல்வார்கள். வட ஆர்க்காட்டில் **திரண்டு விட்டாள்** என்ற சொற்றொடரைப் பயன்படுத்துவர். பேசுவது போல் எழுத வேண்டுமென்று சொல்லுகிற அன்பர்கள் இச்சொற்றொடர்களுள் எதைக் கையாளவேண்டுமென்று கருதுகின்றனரோ?*

*- 'சோமலெ', வளரும் தமிழ், பக். 395-396.*

## 117. செட்டிநாட்டுத் தமிழ்

*வ.ரா. அவர்கள் 'ஊழிய'னில் துணை ஆசிரியராக இருந்த போது, செட்டிநாட்டுச் சொற்கள் அவர் கவனத்தைக் கவர்ந்தன. "மணி என்ன?" என்று வேலையாளைக் கேட்டதற்கு, அவன் '**அரைமணி**' என்றானாம். 'அரைமணி' என்று கேள்விப்பட்டதில்லையே என்று வ.ரா. விழித்தாராம். செட்டிநாட்டில் 12.30 மணி என்பதை 'அரைமணி' என்று சொல்லுவது வழக்கம். 12 மணிக்குப் பிறகு 13 மணி என்று வழங்காமல் 1 மணி என்றே எங்கும் காலம் குறிக்கப் பெறுவதால், 12 மணியோடு ஒரு கால அளவு முடிந்து விடுகிறது. மறுகால அளவு தொடங்கப்பெறுவதற்குப் பொருத்தமாக, 12.30 மணியை 'அரைமணி' என்று கூறுவர்.*

*இன்னொரு தடவை, வ.ரா. ஒரு செட்டியாரைச் சந்தித்தபோது அவருடைய வருவாயைப் பற்றி வினவினாராம். "வடிவாக 300" என்று அவர் சொன்னது வ.ரா.வுக்கு வியப்பைத் தந்ததாம். சரியாக, சில்லறைத் தொகையின்றி என்ற பொருளில் 'வடிவாக' என்ற சொல் செட்டிநாட்டில் வழங்கி வருகிறது.*

*- 'சோமலெ', செட்டிநாடும் தமிழும், ப. 243.*

## 118. பெரியவர்களின் பெயர்ச் சுருக்கங்கள்

ஒருவர் புகழ் பெற்ற பின்னர் அவருடைய பெயரை அடிக்கடி சொல்லவும் எழுதவும் நேரிடுகிறது. ஆகையால் பெரியவர்களுடைய பெயர்களைச் சுருக்கமாகச் சொல்லியும் எழுதியும் வருகின்றோம். ச. இராசகோபாலாச்சாரியார் என்று சொல்வதற்கு 'சி.ஆர்.' என்றும், சர். சி.பி. இராமசாமி அய்யர் என்பதற்கு 'சர்.சி.பி. என்றும், டாக்டர், ரா.க. சண்முகம் செட்டியார் என்பதற்கு 'ஆர்.கே.எஸ்.' என்றும், திருவாரூர் வி. கலியாணசுந்தர முதலியார் என்பதற்குத் 'திரு.வி.க' என்றும் சுருக்கிச் சொல்லியும் எழுதியும் வருகிறோம். இவற்றைப் போலவே வ.உ. சிதம்பரம் பிள்ளை என்பதை 'வ.உ.சி.' என்று குறிப்பிடுகின்றோம். ஆனால், பல மாணவர்கள் வ.உ.சி. என்பதை வ.ஊசி என்று எழுதி வருகின்றனர்.

*- 'சோமலெ', பிரயாண இலக்கியம், ப.53.*

## 8

## சிந்தனைச் சுடர்



### 119. 'சாவா இலக்கியம்'

● உலகை நல்வழிப்படுத்தும் நூல்கள் ஒரு சிலவே. ஏனைய எல்லாம் அவ்வப்போது ஒரு தடவை படித்துவிட்டுப் பழைய காகிதம் வாங்குபவனுக்கு விற்கப்படுகின்றன. அவ்வாறின்றி மீண்டும் மீண்டும் படித்து இன்புறத்தக்கவையே **'சாவா இலக்கியம்'** எனப்படுவன. தமிழில் அப்படிப் பட்ட நூல்கள் திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, கம்ப ராமாயணம், தேவார திருவாசகம், பட்டினத்தார் பாடல், தாயுமானவர் பாடல், வள்ளலார், பாரதியார் பாடல் முதலியவை.

● நூல்களை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். சில நூல்கள் ஒரு தடவை படித்துவிட்டுத் தூர எறிந்துவிடக் கூடியவையாக இருக்கும். வேறு சில நூல்கள் நிலைத்து நிற்கும் இயல்பு உடையனவாக விளங்கும். **ரஸ்கின்** என்ற மேனாட்டு அறிஞர் ``Books of the hour, books of all time" என்று இவற்றைப் பகுத்தார். திருக்குறள் `books of all time' என்ற பகுதியில் சேர்ந்தது. அது 'சாவா இலக்கியம்'.

*- 'சோமலெ', பல்சுவைக் கட்டுரைகள், பக். 27-28; 99.*

## 120. மருதாணி - கை கண்ட மருந்து

*படித்த பெண்கள் இக்காலத்தில் உதடுகளிலும், கை-கால் விரல் நகங்களிலும் சாயம் பூசிக் கொள்வதை நாகரிகமாகக் கருதுகிறார்கள். அதற்காக மாதம் ஐந்து அல்லது பத்து ரூபாய் வரையிலும் கூடச் செலவிடுகிறார்கள். இந்தத் தொகை பல ஏழைக் குடும்பங்களின் வாழ்க்கை முறையையே மாற்றிவிடக் கூடும். பெண்கள் உதட்டுச் சாயம் பூசுவது உதடு சிவப்பாக இருப்பதற்குத் தான். சிகரெட் குடிக்கும் பெண்களின் உதடுகள் மற்றவர்களின் உதடுகளை விடக் கறுப்பாகி விடுவதால், இச்சாயத்தைப் பூசுவது இன்றியமையாததாக ஆகிவிடுகிறது. வெற்றிலை போட்டால் இந்த நோக்கத்தைச் சிக்கனமாக நிறைவேற்றி விடலாம். நகச்சாயம் பூசுவதற்குப் பதிலாக மருதாணி இலைகளை அரைத்து உள்ளங்கைகளிலும் நகங்களிலும் பூசிக்கொள்ளலாம். மருதாணி, உடலிலுள்ள வெப்பத்தைக் குறைத்துக் குளிர்ச்சியைத் தரவல்லது. பித்த நோய்க்கும் அது கைகண்ட மருந்து.*

*- 'சோமலெ', நீங்களும் தூதுவர் ஆகலாம், ப. 129.*

## 121. 'ஒரு வாயும் இரண்டு காதும் ஏன்?'

செல்வாக்கு, திறமை, நாவன்மை, நுண்ணறிவு - இவை உள்ளவரையே தூதுவராக அனுப்புவது வழக்கம். அயல் நாடுகளுக்குத் தூதுவராகச் செல்வோர் அறிவும், தோற்றமும், ஆழ்ந்த படிப்பும் நிரம்பப் பெற்றவராக இருக்க வேண்டும் என்பதை,

"அறிவுஉருவு ஆராய்ந்த கல்வி இம்மூன்றும்
செறியுடையான் செல்க வினைக்கு"

என்று வள்ளுவர் அளந்து கூறியிருப்பது உள்ளுந்தோறும் உவகை பயப்பதாகும்.

நமக்கு ஒரு வாயும் இரண்டு காதும் உண்டு. பேசுவதைப் போல் இரண்டு பங்கு கேட்க வேண்டும் என்பதே அதன் பொருள். இது மற்றவர்களை விட, தூதுவருக்கு மிகவும் பொருந்தும். தம்மைக் காணவருவோர் சொல்வதையெல்லாம் அமைதியாகவும், பொறுமையாகவும் காது கொடுத்துக் கேட்க வேண்டும். தாம் இன்றியமையாது பேச வேண்டியது ஏற்பட்டால் மட்டுமே பேச வேண்டும். இயன்றவரை வாயை மூடிக்கொண்டு இருப்பது நன்மையைத் தரும்.

"மனிதர்கள் மறந்து விடுவார்கள். கடவுள் மன்னித்து விடுவார். ஆனால் பெண்கள் எப்போதும் நினைவில் வைத்துக் கொள்வார்கள்" என்று ஒரு சொற்றொடர் உண்டு. இந்த நினைவாற்றல், தூதுவர் அலுவலகத்தில் பணியாற்றுபவர்களுக்கு மிகவும் பயன்படும்.

- 'சோமலெ', நீங்களும் தூதுவர் ஆகலாம், பக். 23, 54, 130.

## 122. அரசியல் தூதுவராகச் சென்ற முதல் பெண்

அரசியல் தூதுவராகச் சென்ற முதல் பெண் ஔவைப் பிராட்டி என்று சொல்லலாம். அதிகமானிடமிருந்து, தொண்டைமானிடம் அவர் அரசியல் தூது சென்றதாகப் புறநானூறு கூறுகிறது. அந்த அம்மையார் காஞ்சி அரசரால் சிறப்பிக்கப் பெற்றதையும், அவரைப் புகழ்வது போல் பழிப்பதையும் புறநானூற்றுப் பாடல் வாயிலாக அறிகிறோம். சிக்கலான சூழ்நிலைகளில், நம் நாட்டின் மரியாதையைக் காக்கவும் நலனைப் பேணவும் இந்த முறைகளைப் பெண்கள் கையாளலாம்.

*- 'சோமலெ', நீங்களும் தூதுவர் ஆகலாம், பக். 121-122.*

## 123. ஒரு நாட்டின் பலம்

ஒரு நாட்டின் பலத்தைக் கீழ்க்கண்டவற்றால் முடிவு செய்யலாம்:

1. சிறந்த போர்க் கருவிகளை உடைய படை.
2. மக்களுடைய வீரம்
3. பொருளாதாரச் செழிப்பு
4. தொழிலில் தன்னிறைவு (சாதகமான வெளிநாட்டு வாணிபம்)
5. நாட்டின் வருங்காலத்தில் மக்களுக்கு நம்பிக்கை
6. சிறந்த தூதுவர்கள்

முதல் ஐந்து வகைப் பலங்களும் சிறப்பாக இருந்தாலுங் கூட, சிறந்த தூதுவர்கள் இல்லாமையால் பல நாடுகள் எண்ணற்ற துயரங்களை அனுபவித்துள்ளன. எனவே, செலவைப் பாராமல் தூதுவர் அலுவலகங்கள் செம்மையாக நடைபெற ஏற்பாடு செய்வதும், தலைசிறந்த அறிஞர்களைத் தூதுவர்களாக நியமிப்பதும் நம் நாட்டைப் பலம் பொருந்திய நாடாக ஆக்குவதற்கு நாம் மேற்கொள்ளும் முயற்சிகளே யாகும்.

- 'சோமலெ', நீங்களும் தூதுவர் ஆகலாம், ப.171.

## 124. உள்ளத்திலே ஒரு குளிர்ச்சி...!

*குற்றாலம்! ஆ! எவ்வளவு இனிய பெயர்! நீங்கள் தாவர சாத்திர மாணவராக இருந்தால், அங்கு மலைப் பகுதிகளி லுள்ள மரம், செடி, கொடிகளின் பெயர்களும் அவற்றின் இயல்பும் உங்கள் நினைவுக்கு வரும்; நீங்கள் கலைப்பற்று டையவராக இருந்தால், சித்திரசபைக் காட்சிகள் உங்கள் மனக்கண் முன்னே தோன்றும்; நீங்கள் இலக்கியத்தில் ஈடுபாடு உடையவராக. இருந்தால்,*

'வம்பார் குன்றம் நீடுயர் சாரல் வளர்வேங்கைக்
கொம்பார் சோலைக் கோல வண்டி யாழ்செய் குற்றாலம்'

*என்ற ஞானசம்பந்தர் பாடல் உங்கள் நினைவுக்கு வரும்; நீங்கள் கடவுள் நெறி மறவாதவராக இருந்தால், தவத்தின் பெருமையும் குற்றால நாதரின் அருள்வெள்ளமும் உங்கள் நினைவில் தோன்றும். ஆனால், உங்கள் எல்லோருக்குமே குற்றாலம் என்ற உடனேயே, உள்ளத்திலே ஒரு குளிர்ச்சி பிறந்திருக்கும்.*

*- 'சோமலெ', பிரயாணம் ஒரு கலை, ப. 56.*

## 125. உண்மை சொன்ன கைதி

விஜய நகரத்தை ஓர் அரசன் ஆண்டு வந்தான். ஒருநாள் அவன் சிறைச்சாலைக்குச் சென்று அங்குள்ள கைதிகளைக் கவனிக்க வேண்டுமென்று விரும்பினான். உடனே தனது பல்லக்கைக் கொண்டு வரும்படி மந்திரிகளுக்கு உத்தர விட்டான். அவ்வாறே பல்லக்கும் வந்து சேர்ந்தது.

அரசன் சிறைச்சாலையை அடைந்ததும் சில குற்றவாளி கள் கால்களில் விலங்குகளை மாட்டிக்கொண்டு வேலை செய்து கொண்டிருந்தனர். அரசர் அவர்களைப் பார்த்து மிகவும் பரிதாபப்பட்டான்.

உடனே அங்கு வேலை செய்து கொண்டிருந்த ஐந்து கைதிகளையும் அழைத்தான். தனக்கு முன்னால் வரிசையாக நிற்கும்படி உத்தரவிட்டான். அவர்கள் ஒவ்வொருவரையும் பார்த்து, அவர்கள் சிறைக்கு வந்த காரணத்தைக் கேட்டான்.

"நான் ஒரு குற்றமும் செய்யவில்லை. பொய்ச்சாட்சியை நம்பி நீதிபதி என்னைத் தண்டித்துவிட்டார்" என்று முதலாவது குற்றவாளி கூறினான்.

"நீதிபதி என் மீது பொறாமை கொண்டு என்னை வீணாகச் சிறைக்கு அனுப்பிவிட்டார்" என்று இரண்டாவது குற்றவாளி சொன்னான்.

"நீதிபதியின் கவனக் குறைவாலேயேதான் தண்டிக்கப் பட்டேன்" என்றான் மூன்றாவது குற்றவாளி.

"என்னுடைய எதிரிகள் வேண்டுமென்றே என் மீது குற்றஞ்சாட்டி என்னைச் சிறைக்கு அனுப்பினார்கள்" என்று நாலாவது கைதி மன்றாடினான்.

தங்களை மன்னித்து விடுதலை செய்ய வேண்டுமென்று அவர்கள் அரசனை வேண்டினார்கள். பிறகு அரசன்

ஐந்தாவது குற்றவாளியைப் பார்த்து, "நீ என்ன குற்றம் செய்தாய்?" என்று வினவினான்.

"அரசே! நான் ஒரு பணப்பெட்டியை அறியாமல் திருடிவிட்டேன். ஆகையினால், என்னைத் தண்டித்தது நியாயமே. நான் உங்களிடம் மன்னிப்புக் கேட்பது சரியல்ல" என்று ஐந்தாவது குற்றவாளி பணிவாகப் பதில் சொன்னான். இக்குற்றவாளி உண்மையை ஒப்புக்கொண்டதற்காக அரசன் அவன்மீது இரக்கம் அடைந்தான். உடனே சிறை அலுவலரைக் கூப்பிட்டு இக்குற்றவாளியின் கால்களிலுள்ள விலங்குகளை நீக்கச் செய்தான். குற்றவாளிகளிடம் கருணை காட்டும் உரிமை அரசனுக்கு உண்டு அல்லவா? அவனைச் சிறையிலிருந்து விடுதலை செய்யும்படியும் அரசன் கட்டளை யிட்டான். இக்குற்றவாளி விடுதலை செய்யப்பட்டதைக் கண்டு ஏனைய குற்றவாளிகள் வெட்கப்பட்டனர்.

பொய் சொன்னது பிழை என்பதைக் கைதிகள் உணர்ந்தனர்.

- *'சோமலெ', சிறுவர்களுக்கு ஒரு சில கதைகள், பக். 24-26.*

## 126. துணிவுள்ள நாய்

சுவிட்சர்லாந்து ஓர் அழகிய நாடு. இயற்கை எழில் நிறைந்தது. அங்கு ஒரு செல்வர் அழகான நாயை வளர்த்து வந்தார். அந்த நாய் மிகவும் நன்றியுடையது. தன் எஜமான னுக்கு ஆபத்து வராமல் காக்க வேண்டுமென்று அது ஆசைப் பட்டது. மற்றவர்களுக்கும் ஆபத்து நேர்ந்தால் இந்த நாய் துணிவுடன் அவர்களைக் காப்பாற்றும்.

ஒருநாள் ஏரியில் மிகப் பயங்கரமான புயல் அடித்தது. காற்றினால் பெரிய பெரிய அலைகள் எழுந்தன. அப்போது கரைக்குச் சிறிது தூரத்தில் ஒரு கப்பல் மிகவும் ஆபத்தான நிலையிலிருந்தது. சிறிது நேரத்தில் முழுகிவிடும் போல் தோன்றியது. அவ்வழியாகச் சென்றுகொண்டிருந்த நாய் இதைக் கண்டது. கப்பல் நின்ற திசையைப் பார்த்துப் பலமாகக் குரைத்தது. அப்பொழுது நாயின் எஜமானர் நாய் குரைப்பதன் காரணத்தை அறிய எண்ணி ஏரியின் பக்கம் திரும்பினார். கப்பல் ஆபத்தான நிலையிலிருப்பது அவருக்குப் புலப்பட்டது.

உடனே நாயின் எஜமானர் வீட்டிற்கு ஓடிப்போய் ஒரு பெரிய கயிற்றை எடுத்து வந்தார். நாயின் வாயில் கயிற்றைக் கொடுத்து ஏரியில் நாயை இறக்கினார். அக்கயிற்றில் நீரில் மிதக்கும் டயர்கள் கட்டப்பட்டிருந்தன. கப்பலில் இருப்பவர் கள் நாய் நீந்தி வருவதைக் கண்டு களிப்படைந்தனர். நாய் கப்பலை அணுகியதும் எல்லோரும் நீரில் குதித்து நாய் இழுத்து வந்த மிதக்கும் டயரில் ஏறிக்கொண்டார்கள். நாயின் உதவியினால் யாவரும் கரை வந்து சேர்ந்தனர்.

இந்த நாயின் உதவியில்லாவிட்டால் அன்று அவர்கள் இறந்து போயிருப்பார்கள். இந்த நாயின் துணிவைப் போற்றுவதற்காக சுவிட்சர்லாந்தில் ஒரு பெரிய சிலை வைத்திருக்கிறார்கள்.

*- 'சோமலெ', சிறுவர்களுக்கு ஒரு சில கதைகள், பக். 27-29.*

## 9

# படைப்புத் திறம்



## 127. உவமைகள்

❒ *ரயிலில் பிரயாணம் செய்பவர்களுக்கு 'ரயில்வே கைடு' எப்படி ஒரு வழிகாட்டியாக இருக்கிறதோ, அது போல் வாழ்க்கை என்னும் பயணத்தை மேற்கொண்டவர்களுக்கு வாழ்வுக்கு வழிகாட்டும் ஒரு நூலாகத் திருக்குறள் விளங்குகிறது.*

*- பல்சுவைக் கட்டுரைகள், பக்.104-105.*

❒ *தாமரை இல்லாத தடாகமும், விண்மீன் இல்லாத வானமும் கவிஞர்களுடைய மனத்தை எஞ்ஞான்றும் தொடுவதில்லை; விமான மங்கையில்லாத விமானமும் பிரயாணிகளுடைய உள்ளத்தை ஒருபோதும் தொடுவதில்லை!*

செ. 10. *- பிரயாணம் ஒரு கலை, ப. 104.*

❐ வட ஆப்பிரிக்காவில் நடுநாயகமாக விளங்கும் நாடு அல்ஜீரியா. மொராக்கோ அல்ஜீரியாவின் வலது காது போலவும் முனீசியா அந்த நாட்டின் இடது காது போலவும் அமைந்திருக்கின்றன.

*- வடமேற்கு ஆப்பிரிக்கா (ஆப்பிரிக்க நாடுகள் வரிசை-9), ப.31.*

❐ ஐந்து விரல்களும் அடுத்தடுத்து இருந்தாலும் அவைகளுள் ஒன்றுக்கொன்று எவ்வளவோ வேறுபாடு இருப்பது போல, ஆப்பிரிக்க நாடுகளுக்குள்ளும் வேறுபாடு நிலவுகிறது.

*- நடுஆப்பிரிக்கா (ஆப்பிரிக்க நாடுகள் வரிசை-10), ப.35.*

❐ அழகிய பெண்ணைப் பார்த்து ஆசைப்படாத ஆடவனுமில்லை; அள்ளிக்கொடுக்கும் எண்ணெய்ச் செல்வம் நிறைந்த குவாயிட்டைக் கைப்பற்ற விரும்பாத அரசும் இல்லை.

*- உலக நாடுகள் வரிசை-3: குவாயிட்; ப.40.*

❐ ஆங்கிலத் தாள்களைப் படித்துப் பழகிப் போனவர்கள் தமிழ் இதழ்களை மட்டும் படித்தால் வயிறு நிறையச் சாப்பிட்டவர்களைப் பஞ்ச காலத்தில் அளவுச்சாப்பாடு சாப்பிடச் சொல்லுவது போன்று இருக்கிறது.

*- தமிழ் இதழ்கள், ப. 38.*

❐ மேலைநாட்டு நாகரிகத்தில் ஏதென்ஸ், கான்ஸ்டாண்டி நோபிள் போன்று தமிழர் நாகரிகத்தின் தாயகமாக இருந்து வருவது மதுரை மாநகர்.

*- மதுரை மாவட்டம். ப.1.*

❐ பாஸ்வெல் ஜான்சனைப் பற்றி எழுதியது போல, சேதுப்பிள்ளையைப் பற்றி பல நூறு சுவையான கதைகளைத் தரத் தமிழ்நாட்டில் ஒரு பாஸ்வெல்லும் தோன்றாதது ஒரு பெருங்குறை.

*- நான் கண்ட விழாக்கள், ப.50.*

❑ இலக்கியம் கண்ணாடியைப் போன்றது. கண்ணாடியில் யார் பார்க்கிறார்களோ அவர்களுடைய முகம் அதில் தெரியும்.

*- பல்சுவைக் கட்டுரைகள், ப.5.*

❑ முகமலர்ச்சி ஒவ்வொருவருக்கும் இன்றியமையாதது. அன்றலர்ந்த செந்தாமரை போல் உங்களுடைய முகம் எப்போதும் இருத்தல் வேண்டும்.

*- பல்சுவைக் கட்டுரைகள், ப.124.*

❑ பழுப்பு நிலக்கரி பற்றி இதுவரை நடந்திருக்கும் ஆராய்ச்சி கைமண் அளவு; இனி, நடைபெற வேண்டியது உலகளவு.

*- நெய்வேலி, ப.77.*

❑ நெய்வேலியில் கிடைக்கும் பழுப்பு நிலக்கரி, தமிழ் நாட்டில் தொழில் பெருகி வளம் சிறக்குமென, குடுகுடுப்பைக் காரனைப் போலவே வருங்காலத்தை அறிவிக்கிறது.

*- நெய்வேலி, ப.9.*

❑ சுவரை வைத்துத்தான் சித்திரம் எழுதவேண்டும்; அதுபோல உடம்பை உறுதியாக வைத்துக்கொண்டுதான் செயற்கரிய செயல்களில் ஈடுபட இயலும்.

*- உலக நாடுகள் வரிசை-2: சுவீடன், ப.19.*

❑ ஆங்கில மொழியில் டிரைடன் என்பவர் உரைநடைக்குத் தந்தையாக விளங்குவது போலவே, தமிழ் உரைநடையின் தந்தையாக ஆறுமுக நாவலர் மிளிர்கின்றார்.

*- வளரும் தமிழ், ப. 37.*

## 128. பழமொழிகள்

❒ மலை முகமது இருக்கிற இடத்திற்கு வராவிட்டால், முகமதுதான் மலை இருக்கிற இடத்திற்குச் செல்லவேண்டும்.

*- பிரயாண இலக்கியம், ப.71.*

❒ திருச்செந்தூரான் கடல் அறியான், திருவாரூரான் தேர் அறியான்.

*- பிரயாண இலக்கியம், ப.21.*

❒ மகளுடைய பிள்ளையை எடுக்கிக் கொண்டு போ, மகனுடைய பிள்ளையை நடத்திக் கூட்டிப் போ.

*- நமது தலைநகரம், ப.88.*

❒ எங்கே போவோம் என்பது தெரியாவிட்டால் எங்கிருந்து வந்தோம் என்பதும் தெரியாது.

*- ஆப்பிரிக்கப் பழமொழி, ஆப்பிரிக்க நாடுகள் வரிசை-7: மேற்கு ஆப்பிரிக்கா, ப. 32.*

❒ ஆத்திரப்பட்டு எய்தால் அம்பு குறியை அடையாது.

*- ஆப்பிரிக்கப் பழமொழி, ஆப்பிரிக்க நாடுகள் வரிசை-1: ஆப்பிரிக்கா, ப.33.*

❒ உன்னால் நடக்க முடியுமாயின், உன்னால் நடன மாடவும் முடியும்.

*- சுவீடிஷ் பழமொழி, பல்சுவைக் கட்டுரைகள், ப.134.*

❒ வீட்டில் ஒரு விருந்தினர் இருப்பது வீட்டில் ஒரு கடவுள் இருப்பது போலாகும் (Guest in the home is god in the home).

*- செக் நாட்டுப் பழமொழி*

## 129. புதுமொழிகள்

❒ 'விருந்தும் மருந்தும் மூன்று நாள்' என்பது பழைய பழமொழி. 'மாநாடும் அறக்கட்டளைச் சொற்பொழிவும் மூன்று நாள்' என்பது புதிய பழமொழி.

*- தமிழ் இதழ்கள், ப.3.*

❒ 'வீட்டைக் கட்டிப் பார், கல்யாணத்தைச் செய்து பார்' என்பது தமிழ்நாட்டில் ஒரு பழமொழி. அந்தச் செயல்களிலே உள்ள தொல்லைகளைக் குறிப்பிடுவதற்காகத் தான் இந்தப் பழமொழிகள் ஏற்பட்டிருக்கின்றன. அவற்றோடு 'உலகத்தைச் சுற்றிப் பார்' என்பதையும் சேர்த்துக் கொள்ளலாம்.

*- பிரயாண இலக்கியம், ப.14.*

❒ "இயற்கையின் கவின்பெரு வனப்பு, குளிப்பவர்களைக் குறள் பாடச் சொல்லும்.

'குளிப்பின் குற்றால அருவியிலே குளிக்க; அஃதின்றேல்,
குளிப்பின் குளியாமை நன்று'

என்பது போன்ற புதுமாதிரியான குறள்களைப் பாடத் தோன்றும்."

*- பிரயாணம் ஒரு கலை, ப.66.*

## 130. மேற்கோள்கள்

❒ *"பிரயாணத்தில் ஏற்படும் நன்மைகள் கணக்கிலடங்கா. அந்த அனுபவச் செல்வத்தை அடையும் பேறு பெறாதவர்கள் பிரயாண நூல்களைப் படித்துப் பயன்பெறலாம்."*

*- ஜவஹர்லால் நேரு (பிரயாண இலக்கியம், ப.14)*

❒ "புதிதாக ஒரு நாட்டுக்குப் போகுமுன் அந்நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களை நன்றாகக் கேட்டுத் தெரிந்து கொள்."

*- கன்ப்யூசியஸ் (நான் கண்ட வெளிநாட்டுக் காட்சிகள், ப. 103)*

❒ "நேரமும் பணமும் ஒன்றே. நேரந்தான் நாகரிகம், கலை, இலக்கியம், ஓய்வு, இன்பம். சுருங்கச் சொன்னால் வாழ்க்கையின் பயனை நன்றாக அனுபவிக்க உதவுவது நேரமே."

*- பெர்னார்ட் ஷா (அமெரிக்காவைப் பார்!, ப.191)*

❒ "ஒரு நாட்டின் வரலாறு அந்த நாட்டில் தோன்றிய பெருமக்களின் வரலாறேயாகும்."

*- கார்லைல் (பல்சுவைக் கட்டுரைகள், ப.38)*

❒ "புகழுக்குப் பகையும் புலமைக்குப் பொறாமையும் எங்கெங்கும், எஞ்ஞான்றும் காத்திருக்கும்."

*- பேகன்*

❒ "ஆண்டவனைத் தேடி எங்கே போகின்றீர்கள்? துன்பப்பட்டவர்கள் ஏழைகள். இவர்கள் யாவரும் கடவுளின் வடிவங்கள் அல்லவா? இந்த ஏழைகளையே உங்கள் கடவுளாகக் கொள்ளுங்கள்."

*- விவேகானந்தர் (பிரயாண இலக்கியம், ப.47)*

❑ *"பல்வலியால் துன்பப்படுபவன், தன்னைத் தவிர உலகில் அனைவரும் நலமாயிருப்பதாக எண்ணுகிறான்; ஏழைகளும் பணக்காரரைப் பற்றி இப்படியே தவறாக முடிவு செய்து விடுகிறார்கள்."*

*- பெர்னார்ட் ஷா (நமது தலைநகரம், ப.42).*

❑ *"ஆசை யாரை விட்டது? தளபதியாகவே இருந்து பழகிவிட்டேன். ஆணைகள் பிறப்பிப்பதே என் இயல்பு. அவற்றைப் பிறர் நிறைவேற்றுவதைக் காண்பதே என் அன்றாட வாழ்க்கை. பதவியை விட்டுக்கொடுக்க என் மனம் இடம்தரவில்லையே?"*

*- நெப்போலியன் (ஆப்பிரிக்க நாடுகள் வரிசை-10: நடு ஆப்பிரிக்கா, ப.46)*

❑ *"இலக்கியம் அனுபவத்தின் கனி; அதில் பிழிந்து எடுத்த சாறே நாடகம்."*

*- மோலியர் (வளரும் தமிழ், ப. 205)*

❑ *"ஆங்கிலம் வணிகத்தின் மொழி என்றும், இலத்தீன் சட்டத்தின் மொழி என்றும், கிரேக்கம் இசையின் மொழி என்றும், ஜெர்மன் தத்துவத்தின் மொழி என்றும், பிரெஞ்சு தூதின் மொழி என்றும், இத்தாலியன் காதலின் மொழி என்றும் கூறுவது ஒருபுடை ஒக்குமெனின் தமிழ் இரக்கத்தின் மொழி எனக்கூறுவது இனிது பொருந்தும். பத்தியின் மொழி எனினுமாம்."*

*- தனிநாயக அடிகள் (வளரும் தமிழ், ப.280)*

## 131. நகைச்சுவை உணர்வு

❒ **வேலூர்** மத்திய சிறைச்சாலை: தமிழ்நாட்டிலேயே பெரிய சிறைச்சாலை இதுதான். "நான் வேலூரில் இரண்டாண்டுகள் இருந்திருக்கிறேன்" என்று ஒருவர் சொன்னால், அது அவர் அந்நகரில் வேலை பார்த்ததைக் குறிக்கலாம் அல்லது சிறையில் இருந்ததைக் குறிப்பிடுவதாகவும் இருக்கலாம்.

*- வடஆர்க்காடு மாவட்டம், ப.154.*

❒ வேடந்தாங்கலில் பறவைகளின் எண்ணிக்கையை விட, கொசுக்களின் எண்ணிக்கை கூடுதலாக இருக்குமென்பது என் கருத்து.

*- செங்கற்பட்டு மாவட்டம், ப.199.*

❒ "மனிதர்கள் மறந்து விடுவார்கள். கடவுள் மன்னித்து விடுவார். ஆனால் பெண்கள் எப்போதும் நினைவில் வைத்துக் கொள்வார்கள்" என்று ஒரு சொற்றொடர் உண்டு.

*- நீங்களும் தூதுவர் ஆகலாம், ப.130.*

❒ நன்றி கூறும்போது மக்கள் எழுந்து சென்று விடுகிறார்கள் என்பதற்காக, மட்டக்களப்புத் தமிழ்க்கலை மன்றத்தார் தலைவரின் முடிவுரைக்கு முன்னரே நன்றிகூறி விட்டார்கள். ஏனைய இடங்களில் விழா நடத்துபவர்களுக்கு இது ஒரு முன்மாதிரி.

*- நான் கண்ட விழாக்கள், ப.112.*

❒ அமெரிக்கச் செல்வர்கள் தேன்மதி கழிக்க ஹவாய்த் தீவுகளுக்குச் செல்லுகின்றனர். இது உலகிலேயே அழகிய தீவுக்கூட்டம். இங்குள்ள வைக்கிச்சி பீச்சின் சிறப்பு அளவிடற்பாலது. இங்கே நீராடியதைக் கண்டதும், நானும் திருவள்ளுவருடன் போட்டியிட்டேன்.

குளிப்பின் வைக்கிச்சி பீச்சிலே குளிக்க, அஃதின்றேல்,
குளித்தலிற் குளியாமை நன்று.

*- பல்சுவைக் கட்டுரைகள், ப.139.*

❐ *பிற நாட்டவரெல்லாம் போற்றும் நூலாகத் திருக்குறள் இருப்பதால் தான் சுப்பிரமணிய பாரதியார், "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு" என்று பாடியுள்ளார். திருக்குறளையும் வள்ளுவரையும் உலகுக்கே விட்டுவிடாமல் தமிழர்களாகிய நாமும் சிறிது படித்துப் பயனடைய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு திருக்குறள் வகுப்பை மிக்க மகிழ்ச்சியுடன் தொடங்கி வைக்கிறேன்.*

*- பல்சுவைக் கட்டுரைகள், ப.106.*

❐ *ஒருவனுடைய அறிவு கூர்மையாக இல்லை என்று நாம் நினைத்தால் "உன் மூளையில் என்ன களிமண்ணா இருக்கிறது?" என்று கேட்கிறோம். இனி ஒருவரும் அவ்வாறு கேட்க வேண்டாம் என்று அன்பர்களை வேண்டுகிறேன். களிமண்ணின் பயன்கள் பல. ஐயப்பாடு இருந்தால், நெய்வேலிக்குச் சென்று பாருங்கள்.*

*- நெய்வேலி, ப.121.*

❐ "கல் எல்லாம் மாணிக்கக் கல் ஆகுமோ?
சந்தை எல்லாம் பொள்ளாச்சிச் சந்தை ஆமோ?"

*- கோயம்புத்தூர் மாவட்டம், ப.195.*

## 132. வாக்குமூலம்

❐ புதிய செய்திகளை அறிந்துகொள்ளுவதில் எனக்கு எப்பொழுதுமே ஆர்வம் மிகுதி. அவ்வப்போது என்னுடைய மனத்தை ஈர்த்த சிறப்பான நிகழ்ச்சிகளைக் குறித்துக் கொள்ளுவேன்.

*- பிரயாண இலக்கியம், ப.7.*

❐ ஓமந்தூராரின் குடும்பத்தினர், உறவினர்கள், நீண்ட கால நண்பர்கள், அவருடன் சிறையில் இருந்தவர்கள், அவர் முதலமைச்சராக இருந்தபோது உயர்பதவிகளில் இருந்தவர் கள், முதலமைச்சரின் அலுவலகத்தில் பணிபுரிந்த வர்கள், அவர் நியமித்த அமைச்சர்கள், அவருடைய அரசியல் கட்சியினர், மாற்றுக் கட்சியினர், அவருடைய உடல் நலத்தைப் பேணிய மருத்துவர்கள், விமானம் ஓட்டியவர்கள், முடிவெட்டியவர்கள் ஆகியோரைச் சந்தித்து அவர்கள் தெரிவித்த தகவல்களின் அடிப்படையில் அமைந்த நூலே இது.

*- முன்னுரை, விவசாய முதலமைச்சர், p.xiii-xiv.*

❐ விவரங்களைச் சேகரிக்கவும் கோயிலின் அன்றாட நடைமுறைகளை அறியவும் கட்டுரைகளில் சொல்லப்பெற்ற விவரங்களைச் சரிபார்ப்பதற்காகவும் நான் ஆறுமுறை இராமேச்சுரத்திற்குச் சென்றிருந்தேன். இவ்வாறே அண்ணாமலைப் பல்கலைக்கழக நூல்நிலையம், சென்னையிலுள்ள மறைமலையடிகள் நூல்நிலையம், கன்னிமரா நூல்நிலையம், தமிழக அரசின் தலைமைச் செயலக நூல்நிலையம் ஆகியவற்றையும் பயன்படுத்தினேன்.

*- பதிப்புரை, இராமேச்சுரம் அருள்மிகு இராமநாதசுவாமி திருக்கோயில் மகாகும்பாபிஷேக சிறப்பு மலர், p.viii.*

❐ வாசகர்கள் பல்லாண்டுகளாக ஆவலுடன் எதிர்பார்த்த 'மதுரை மாவட்டம்' இப்போது வெளிவருகிறது.

ஏறத்தாழ ஐம்பதாண்டுக்காலம் நான் கண்டும் கேட்டும் படித்தும் திரட்டிய குறிப்புகளின் தொகுப்பே இது.

*- முன்னுரை, மதுரை மாவட்டம், p.vi.*

❑ பிரயாணம் மனிதனுக்கு இயற்கையாக அமைந்தது. இல்லாவிட்டால் கடவுள் நமக்குக் கால்களையே படைத்திருக்க மாட்டார் என்பது என் கருத்து.

*- பிரயாண இலக்கியம், ப.12.*

❑ நெய்வேலித் திட்டத்தில் நமது அரசியலார் அக்கறை காட்டிய நாளிலிருந்து, அதைப் பற்றிக் கூர்ந்து தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆர்வம் எனக்கு இருந்தது. முதல் தடவையாக 1954-இல் தொழிலதிபர் ஜி.டி. நாயுடுவும் நானும் நெய்வேலிக்குச் சென்றோம். இந்தியாவின் தலைமை அமைச்சர் ஜவஹர்லால் நேரு நெய்வேலியைப் பார்வையிட்டு அப்போது ஒரு வாரம் இருக்கும். அதன் பிறகு பல தடவை யான் நெய்வேலிக்குச் சென்றது உண்டு. அங்கே, குறிப்பிடத் தக்க நிகழ்ச்சிகள் நடந்த போதெல்லாம் யானும் நெய்வேலிக்குப் போயிருந்தேன்.

*- நெய்வேலி, முன்னுரை, ப.5.*

❑ என் நூலுக்கு வேண்டும் செய்தித் துணுக்குகளைத் தேனீ போல் சேகரித்துக் கொண்டேன். சிறுதுளி பெரு வெள்ளமாயிற்று... ஆங்காங்குள்ள அன்பர்கள் என் பணிக்கு உதவியாக இருந்தனர். ஏறத்தாழ ஓராயிரம் பேருக்குக் கடிதங்கள் எழுதினேன்; ஒரு சிலர் விரிவான பதில் அனுப்பியுதவினர். நகராண்மைக் கழகங்களின் ஆணையர்கள், சட்ட சபை உறுப்பினர்கள், நெடுங்காலமாக ஓர் ஊரிலேயே இருந்துவரும் சிறந்த தலைமை ஆசிரியர்கள், அரசாங்க அலுவலர்கள், ஆராய்ச்சியாளர்கள் ஆகியோர் துணையையெல்லாம் நாடினேன். என் முயற்சி வீண் போகவில்லை.

*- முன்னுரை, சேலம் மாவட்டம், பக். 6-7.*

## 133. புகழாரம்

1. "செய்தி மலர்களையெல்லாம், அவற்றின் செவ்வி குறையாது தொடுத்து, நெஞ்சில் அணிவதற்குரிய நூல் மாலையாக்கியிருக்கும் ஆசிரியர் 'சோமலெ' அவர்களின் பணி பாராட்டிற்குரியது. பல நூல்களைப் படித்துத் தெளிந்த தோடு, இம்மாவட்ட மக்களுடன் பழகி அவர்தம் பழக்க வழக்கங்கள், பேச்சு மொழி முதலியவற்றையும் நேரில் கண்டு அறிந்திருக்கிறார். ஆற்றொழுக்கான எளிய தமிழ்நடையில் எந்த விஷயத்தையும் அவரால் சிறப்பாகச் சொல்ல முடிகிறது."

*- சி. சுப்பிரமணியம், சிறப்புரை, கோயம்புத்தூர் மாவட்டம், ப.6.*

2. "எல்லாவற்றையும் கோவையாகக் கடைசி வரையில் ஆர்வம் குன்றாமலிருக்கும் படி 'சோமலெ' அவர்கள் இப்புத்தகத்தை வெளியிட்டிருப்பது பாராட்டுதற்குரியது. இதைப் போல மற்ற மாவட்டங்களைப் பற்றியும் புத்தகங்கள் வெளிவருதல் வேண்டும். அப்போதுதான் ஒருமாவட்டத் தைப் பற்றிய அருமை பெருமைகளை மறற மாவட்டத்தின ரும் அறியும் வாய்ப்பு ஏற்படும்."

*- ப. சுப்பராயன், சிறப்புரை, சேலம் மாவட்டம், ப.4.*

3. "ஆஸ்திரேலியா, அமெரிக்கா முதலான நாடுகளைப் பற்றி எழுதிய இவர்தம் (சோமலெயின்) எழுதுகோல் தமிழ்நாட்டினைப் பற்றி விரிவாக எழுத முன்வந்தது மகிழத்தக்கது. தமிழ்நாட்டின் பல மாவட்டங்களையும் நன்கு ஆராய்ந்து ஆங்காங்குக் கிடைக்கும் குறிப்புக்களையெல்லாம் விடாமல் தொகுத்து, நிரல்பட வகுத்து, அழகிய நூல்களாக ஆக்கித்தரும் அவர்தம் முயற்சி போற்றுதற்குரியது."

*- மு. வரதராசன், சிறப்புரை, வடஆர்க்காடு மாவட்டம். ப.3.*

4. "நண்பர் திரு. சோமலெ உலகம் சுற்றிய தமிழர். பயண நூல்கள் பலவற்றை வளரும் தமிழில் எழுதிப் பேர் பெற்றுள்ளார். வளரும் தமிழைப் பற்றியும் எழுதித் தமிழ்மக்களை மகிழ்வித்துள்ளார். இப்போது தமிழ்நாட்டில் உள்ள மாவட்டங்களைப் பற்றி விளக்கமாக எழுதும் தொண்டில் ஈடுபட்டுள்ளார்."

*- தெ.பொ. மீனாட்சிசுந்தரன், அணிந்துரை,*
*செங்கற்பட்டு மாவட்டம், ப.8.*

5. திரு. சோம.லெ. இலக்குமணன் செட்டியார் தமிழ் மக்களுக்கு முன்னரே நன்கு அறிமுகமானவர். நிறைந்த விவரங்களோடு சுவை குன்றாமல் பல பெரிய நூல்களை அவர் இயற்றித் தந்துள்ளார். கூரிய மதியும் உசாவி அறியும் அறிவும் நிரம்பப் படைத்த இவ்வெழுத்தாளர் சொந்த முயற்சியில் அப்பொழுதைக்கப்போது திரட்டிய செய்திகளை மற்றையோரும் அறிந்துகொள்ள வேண்டுமென்ற நோக்கத்தால் பல நூல்களை ஏற்கெனவே வெளியிட்டுள்ளார்.

*- அ. சிதம்பரநாதன், அணிந்துரை, தென்ஆர்க்காடு*
*மாவட்டம், ப.3.*

6. "சீர்மை வாய்ந்த செட்டி- நாட்டைப் பற்றிய 'எல்லாப் பொருளும் இதன் பாலுள; இதன்பால் இல்லாத எப்பொருளும் இல்லை' என்று சொல்லத்தக்க சிறப்புடையது இந்நூல். பல நாடு கண்டு பண்புற்ற நண்பர் 'சோமலெ' அவர்கள் 'அமெரிக்காவைப் பார்!' என்று முன்னொரு கால் மேலைநாட்டின் பெருமையைக் காட்டினார். 'எங்கெங்கே சென்றாலும் எந்நாட்டைக் கண்டாலும், தன்னாடே பொன்னாடாகத் தோன்றும்' என்னும் உண்மைக்கு ஒரு சான்றாக, 'செட்டிநாட்டைப் பார்!' என்று இப்பொழுது அழைக்கிறார். 'காட்டுவித்தால் யாரொருவர் காணாதாரே?"

*- ரா.பி. சேதுப்பிள்ளை, அணிந்துரை, செட்டிநாடும்*
*தமிழும், ப.3.*

*7. "சோமலெ அவர்களின் பெரிய உழைப்பையும் பரந்த ஆராய்ச்சி அறிவையும் இந்நூல் முழுவதிலும் நன்கு காணலாம்.. தமிழ் நூல்களில் வேளாண்மைத் துறை பற்றிய நூல்கள் மிகமிகக் குறைவு என வருந்தி இருந்தவர்களில் யானும் ஒருவன். இந்நூல் அப்பெருங்குறையைப் போக்கி இருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைந்தேன்."*

*- கி.ஆ.பெ. விசுவநாதம், மதிப்புரை, வேளாண்மைப் பல்கலைக்கழகம், பக். 7-8.*

*8. "இந்த மலர் முழுவதையும் படிக்கச் சில நாளாகும். படித்து முடித்துவிட்டால் நம் மனத்தில் திருவண்ணாமலை விசுவரூபம் எடுத்து நிற்கும். திருவண்ணாமலைக் கோயில் அருட்கதிர் வீசும் பேரொளி விளக்காய், வரலாற்றின் பல பகுதிகளையும் கண்டு வளர்ந்த திருமாளிகையாய், சிற்பக் கருவூலமாய், புலவர்கள் போற்றும் புகழ்க் கோயிலாய், அருளாளர்களை வாழ்வித்த அரும்பதியாய், ஞானியர்கள் வாழ்ந்த சாந்த நிலையமாய், பொருளுடையாரை அருளுடையாராக்கிய புண்ணியத் தலமாய், மக்களை வாழ்விக்க ஓங்கி நிற்கும் மகோன்னதப் படைப்பாய், காலங்கடந்து நிற்கும் அற்புதச் சாதனையாய்த் தோன்றும்."*

*- கி.வா. ஜகந்நாதன், முன்னுரை, அருள்மிகு அண்ணாமலையார் திருக்கோயில், கும்பாபிஷேக மலர், p.vii.*

*9. 'விவசாய முதலமைச்சர்' என்ற இந்த நூல் ஒவ்வொரு தமிழனுடைய வீட்டிலும் இருக்க வேண்டிய ஒப்பற்ற வரலாற்று நூல். வாழ்க்கையில் அவ்வப்போது ஏற்படும் ஒவ்வொரு சோதனையிலும் எப்படி ஈடுகொடுத்து உயரலாம் என்பதையும் இந்த நூல் போதிக்கிறது. இந்த நூலைப்*

படிப்பதன் மூலமாக ஒரு மனிதன் எப்படித் தூய்மையாக வாழவேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ளலாம்."

*- நா. மகாலிங்கம், அணிந்துரை, விவசாய முதலமைச்சர் (ஓமந்தூரரார் வாழ்க்கை வரலாறு), p. xi.*

10. "கருத்துக்களைத் தொகுப்பதில் - செய்திகளைச் சேர்ப்பதில் செந்தமிழ்த் தும்பியாகத் திரு. சோமலெ திகழ்கின்றார்கள். பேசிக் கொண்டிருக்கும் பொழுது சிறு குறிப்புக் கிடைத்தாலும் தவறாது குறித்துக் கொள்வார்கள். புதிய நண்பர்களைக் கண்டால் அவர்களது ஊர்ப்புறத்துச் செய்திகளையெல்லாம் கேட்டறிந்து கொள்வார்கள். செல்வம் சேர்ப்பது போலச் செய்திகளைச் சேர்ப்பார்கள் என்பது கூடப் பொருந்தும்... இலக்கியங்களைச் சுவை இலக்கியம், பயன் இலக்கியம் என்று பாகுபாடு செய்யும் மரபுண்டு. சோமலெயின் நூல்கள் சுவையும் பயனும் ஒருங்கே கொண்டவை."

*- ஔவை நடராசன், அணிந்துரை, செட்டிநாடும் செந்தமிழும், p.vii.&ix.*

11. "திருக்கோவில்களின் குடமுழுக்கு மலர்கள் தயாரிப்பதில் கோபுரம் போல் உயர்ந்து விளங்குகிறார். தனிச்சிறப்புடன் விளங்கும் திருவண்ணாமலை, இராமேசு வரம், சிதம்பரம் குடமுழுக்குவிழா மலர்கள் இவருடைய பதிப்புத் திட்ப நுட்பத்தைப் பாருக்கு உரைப்பன.. இவர் உருவாக்கிய மலர் ஒவ்வொன்றும் செய்திக் கருவூலம், கருத்துப் பேழை, தகவல் களஞ்சியம்."

*- ச.மெய்யப்பன், பதிப்புரை, இமயம் முதல் குமரி வரை, ப.5.*

12. "தமிழ் மொழியின் வளர்ச்சி வரலாற்றில் தனிஇடம் பெற்ற தகைசான்ற பெருந்தகை 'சோமலெ' அவர்கள். எப்பொருளையும் அடிமுதல் நுனிவரை ஆராய்ந்தறிந்து

தெளிவாகவும் விளக்கமாகவும் தென்றல் நடையிலும் வரைந்து தரும் ஆற்றலாளர் அவர். தமிழகத்தின் வேளாண்மைப் பல்கலைக்கழகம் பற்றி - துல்லியமாகவும் எல்லாத் தகவல்களும் உள்ளடங்கும் வகையிலும் - அவரும் அந்தப் பல்கலைக்கழக மாணவ நன்மணியாம் அவர்தம் புதல்வரும் நல்கிய இந்த நூலுக்கு - அதன் இணைவேந்தர் என்ற முறையிலும் - தமிழ் மாணவன் எனும் வகையிலும் நன்றியை - பாராட்டுக்களை வழங்கி மகிழ்கிறேன்."

*- கா. காளிமுத்து, வேளாண்மைப் பல்கலைக்கழகம், ப.6.*





## நூலாசிரியர் அறிமுகம்

| | |
|---|---|
| பெயர் | : இரா. மோகன் |
| பிறந்த நாள் | : 22.4.1950 |
| கல்வித் தகுதிகள் | : எம்.ஏ., பிஎச்.டி., நிறைசான்றிதழ் (மொழியியல், மலையாளம்) சான்றிதழ் (மொழிபெயர்ப்பு) |
| ஆசிரிய அனுபவம் | : 26 ஆண்டுகள் (1.7.1976 முதல்) |
| தற்போதைய பொறுப்பு | : தலைவர் & ஒருங்கிணைப்பாளர், தமிழியற் புலம், மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை 625 021. |
| வெளியீடுகள் | : நூல்கள் - 50<br>கட்டுரைகள் - நூற்றுக்கு மேல். |
| ஆய்வு வழிகாட்டல் | : பிஎச்.டி. உருவாக்கம் - 9 பேர்<br>எம்.பில். உருவாக்கம் - 30 பேர் |
| சென்ற வெளிநாடுகள் | : சிங்கப்பூர் (2 முறை), அமெரிக்கா |
| பெற்ற விருதுகளும் பரிசுகளும் | : 'தமிழ்ப்பணிச் செம்மல்' விருது, 'சிறந்த பட்டிமன்ற நடுவர்' விருது, 'மூவேந்தர் இலக்கிய விருது', 'வாரியார் விருது', பாரத மாநில வங்கி வழங்கும் சிறந்த நூலுக்கான பரிசு. |
| சிறப்புச் செய்தி | : சாகித்திய அகாதெமிக்காக 'இந்திய இலக்கியச் சிற்பிகள் வரிசை'யில் மூன்று நூல்கள் எழுதியிருத்தல். பல்வேறு வானொலி, தொலைக்காட்சி களில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட பட்டிமன்ற நிகழ்ச்சிகளை நடத்தி இருத்தல். |